# அறிவிப்பு!

இரும்பு கலப்பற்ற உலோகத் தகடுகள், பித்தளை, செம்பு, அலுமினியம் முதலியவைகளை உயர்தர முறையில் உற்பத்தி செய்யும் பொருட்டு நிர்மாணிக்கப்பட்டு வரும் எங்களது தொழிற்சாலை வெகு விரைவில் பூர்த்தியாகி விடுமென்பதை மகிழ்ச்சியுடன் அறிவித்துக் கொள்கிறோம்.

இதற்கிடையே இலேசான உலோகங்கள் இலாகாவும் வீடு மற்றும் கட்டிட வேலைகளுக்கு உரிய இரும்புச் சாமான்கள் உற்பத்தி செய்யப்படும் இலாகாவும் வேலை செய்யத் தொடங்கி விட்டன.

ஜில்லா, மாகாண ஏஜென்ஸி நிபந்தனைகளுக்கு எழுதவும்.

**சதர்ன் மெட்டல்ஸ் & அல்லாய்ஸ் லிமிடெட்**

மானேஜிங் ஏஜண்டுகள்:

**வி. எஸ். ரத்னம் & கோ.**

**சேலம் ஜங்ஷன்**

---

சுளுக்கு, வாயுப் பிடிப்பு, நரம்பு வலி, கால்-கை மரத்துப் போதல், பார்ச வாயு, அல்லது பல்வலி எதுவானாலும்

நிச்சயமாக:
குணமடைய இதை
உபயோகியுங்கள்.




பாதிக்கப்பட்ட இடத்தில் சிறிது ஒத்தடம் கொடுத்து அங்கு தினம் மும்முறை 10-15 நிமிஷம் விட்டுவிட்டு ஓரியண்டல் பாமைத் தேயுங்கள். விரைவில் வலி நீங்கக் காண்பீர்கள்.

**LITTLE'S ORIENTAL BALM**

வாயுவால் இடுப்பு பிடிப்பு, நரம்பு நோய், தலைவலி, வாயு உபத்திரவங்கள், பூச்சிக்கடி, மூக்குவலி, ஜலதோஷம், மார்ச்சளி, ஆஸ்த்மா தொண்டைக் கட்டு, இருமல் ஆகியவைக்கும்

கைகண்ட ஔஷதம்

இந்தியா முழுதும் மிகவும் பிரபலமான சிறந்த ஔஷதம்.

லீலா சிட்னிஸ்
தினமும் லக்ஸ்
டாய்லட் சோப்பினால்
அழகுபடுத்திக்கொள்ளும்
முறையை காண்பிக்கிறார்

லக்ஸ் டாய்லட் சோப்பின் நுரையை தாராளமாக சருமத்தின் மேல் தடவுகிறேன்..

சுத்தமான, குளிர்ந்த ஜலத்தில் கழுவுகிறேன்..

பின்பு, உலர்ந்த மிருதுவான துண்டினால் முகத்தை துடைக்கிறேன்




சினிமா நட்சத்திரங்கள் விரும்பும் அழகையளிக்கும் சோப்

வசீகரமான சருமம் ஒரு சினிமா நட்சத்திரத்திற்கு மிகவும் முக்கியமானது. நீங்களும் உங்களுடைய கட்டழகை மதித்தால் உங்களுக்கும் அது அவசியமே. இந்தியாவில் முன்னணியிலுள்ள சினிமா நட்சத்திரங்களின் அருமையான மேனியை காப்பாற்றும் இனிய பாதுகாப்பு முறையை ஏன் உங்கள் சருமத்திற்கு அளிக்கக்கூடாது? இந்த சுலபமான அழகு படுத்தும் முறையை நீங்களே 30 நாட்கள் கையாளுங்கள் — லக்ஸ் டாய்லட் சோப்பின் வெண்மையான சுகந்த நுரையை பிரயோகப்படுத்துங்கள். அது சருமத்தை குளுமையாகவும், மழமழப்பாகவும், சுத்தமாகவும் வைத்துக் கொள்ளுகிறது.

LTS. 153-23-49 TM

LEVER BROTHERS (INDIA) LIMITED

# வெஜிடபில் கதம்ப ஊறுகாய்




வெள்ளரிக்காய், இஞ்சு, பாவக்காய், கிரைத்தண்டு, வாழைத் தண்டு, கத்தரிக்காய், பச்சை மிளகாய், பச்சை மிளகு — சொல்லும்போதே வாயில் ஜலம் ஊறுகிறது — முதலியவைகளை சேர்த்து கைபடாமல் ஜிஞ்ஞாமிருதமாகத் தயாரிக்கப்பட்டது. வாய்க்கு வெகு ஜோர் உடம்பிற்கு பரம சுகம். இன்றே உங்கள் தேவைக்கு எழுதவும். இரு சைஸ்களில் கிடைக்கும்.

●

தயாரிப்பவர்கள் :

## டி. எஸ். ஆர். & கோ.,

**வாஸனை திரவிய வியாபாரிகள்**
**கும்பகோணம்**

மதராஸ் ஸிடி ஏஜண்டுகள் :
மெஸர்ஸ். புஷ்பவனம் ஸ்டோர்ஸ்
பைகிராப்ட்ஸ் ரோடு, திருவல்லிக்கேணி

கோயமுத்தூருக்கும் பாலக்காடுக்கும்
சோல் ஏஜண்டு :
B. பாலபட்டாபி,
வைசியாள் தெரு, கோயமுத்தூர்

குழந்தைகளுக்கு உண்டாகும் வாயு வயிற்றுப் பொருமல், வயிற்று வலி, அஜீரணம், மாந்தம், பல் முளைக்கும் போது ஏற்படும் வயிற்றுப் போக்கு முதலிய சகல வியாதிகளையும் போக்கி நல்ல ஆரோக்கியத்தையும் தரும் சிறந்த திராவகம்.

குழந்தைக்கு முக்கியமானது
**பேபிகிரைப்**
குழந்தைக்கு ஆரோக்கியமளிப்பது

மிகச் சிறந்த
ரத்த சுத்தி மருந்து
இது சரீரத்தில் உஷ்ணம் அதிகரித்து அதனால் ஏற்படும் ரோகங்களை குணப்படுத்தி, சரீரத்திற்கு ஆரோக்கியத்தை கொடுக்கும். ரத்தத்தை சுத்தி செய்து ரத்த விருத்தியையும் உண்டாக்கும்




**அயோடிசால்**




முகப்பரு, சேத்துப் புண், சிரங்கு, வேனல் கட்டி, தீப்பட்ட புண், கரப்பான் முதலியவைகளுக்குக் கைகண்ட
— மருந்து —

**சைபால்**

எல்லாக் கடைகளிலும் கிடைக்கும்

தயாரிப்பவர்கள் :
**தி சௌத் இந்தியன் மானுபாக்சரிங் கம்பெனி**
மதுரை.

ஏஜண்டுகள் :—ராஜன் ட்ரக் ஸ்டோர்ஸ், நைனியப்ப நாய்க்கன் தெரு, மதராஸ்-3; சீதாராமா ஜெனரல் ஸ்டோர்ஸ், பெஜவாடா; கிரிஜா மெடிகல் ஸ்டோர்ஸ், பெங்களூர் ஸிடி.

# கல்கி
## பொருளடக்கம்

மலர் 6 இதழ் 35 | 1947 மார்ச் 30 | விய பங்குனி 17



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்களும், சம்பவங்களும் கற்பனை.

சிலர் பதவிகளைத் தேடிக்கொண்டு ஓடுகிறார்கள்; சில சமயம் பதவியைப் பிடித்தும் விடுகிறார்கள்! இன்னும் சிலரைப் பதவிகள் தேடிக்கொண்டு ஓடுகின்றன; சில சமயத்தில் அவர்களைப் பிடித்தும் விடுகின்றன! அப்படிச் சென்னை மாகாணத்தின் பிரதம மந்திரிப் பதவியிடம் அகப்பட்டுக் கொண்டவர்தான் தேசபக்தர் ஸ்ரீ ஓமந்தூர் ராமசாமி ரெட்டியார்.

இரண்டு மாதத்துக்கு முன்பு வரையில் ஓமந்தூர் ரெட்டியார் பிரதம மந்திரி பதவியைப் பற்றிக் கனவிலும் நினைத்ததில்லை; அதற்கு ஆசைப்பட்டதுமில்லை. இரண்டு மாதத்துக்கு முன்னால் அவரிடம் அதைப்பற்றி யாரோ பிரஸ்தாபித்தபோது, "என்ன, விளையாடுகிறீர்களா?" என்று கேட்டார். விளையாட்டு இல்லை — வினைதான் என்று மற்றவர்கள் வற்புறுத்தியபோது, "முடியவே முடியாது" என்றார். கடைசி நிமிஷத்தில் எல்லாம் முடிவான பிறகுகூட, ஸ்ரீ ரெட்டியார், "இப்போது கூடச் சொல்கிறேன். வேறு யாரையாவது பாருங்கள். என்னை ஏன் தொந்தரவு செய்கிறீர்கள்?" என்றார்.




இவ்விதம் சிறிதும் பற்றுதல் இல்லாமலும் ஆசைப்படாமலும் பிரதம மந்திரி பதவிக்கு வந்திருப்பதனாலேயே ஸ்ரீ ரெட்டியார் அப்பதவிக்கு மிகவும் தகுதியானவர் என்று ஏற்படுகிறது. அது மட்டுமல்ல; ஸ்ரீ ரெட்டியார் எந்த நிமிஷமும் பதவியை விட்டு விலகுவதற்குத் தயாராகச் சட்டைப் பையில் ராஜீநாமாவை எழுதி வைத்துக் கொண்டிருப்பதாகவும் அறிகிறோம். இக் காரணத்தினாலேயே அவருடைய பிரதம மந்திரிப் பதவி நீடித்திருக்கலாம் என்றும் சொல்லக் கூடும்.

1920-ம் ஆண்டிலிருந்து ஸ்ரீ ஓமந்தூர் ராமசாமி ரெட்டியார் காங்கிரஸ் இயக்கத்தில் இடைவிடாது ஈடுபட்டு வந்தவர். காந்தியடிகளிடம் எல்லையற்ற பக்தி கொண்டவர். கதர், மதுவிலக்கு, அடிப்படைக் கல்வி, தீண்டாமை ஒழிப்பு முதலிய நிர்மாண திட்டங்களில் தீவிரமாக ஈடுபட்டு மௌனத் தொண்டு ஆற்றி வருபவர். கனம் ரெட்டியார் அசல் கிராமவாசி. எனவே, நாட்டில் 100-க்கு 90 பேராகிய கிராமவாசிகளுக்கும், சிறப்பாக விவசாயிகளுக்கும் அவர் சரியான பிரதிநிதி. விவசாயிகள், குடியானவர்களின் கஷ்ட சுகங்களை நன்கறிந்தவர்.

இத்தகைய குண நலன்கள் படைத்த ஓமந்தூர் ரெட்டியார், பதினோரு மாதம் காங்கிரஸ் கட்டுக்கு உட்படாத ஆட்சி நடந்த சென்னை மாகாணத்தில், காங்கிரஸ் மேலோரின் அங்கீகாரத்துடனும் ஆசியுடனும் அரசாங்கப் பொறுப்பை வகித்திருக்கிறார். இத்தகையவர் பிரதம மந்திரியாயிருந்து நடத்தும் அரசாங்கத்தின் கீழ் சென்னை மாகாணம் சுபிட்சமடைந்து எல்லா விதங்களிலும் முன்னேறுமென்று ஆசையுடன் எதிர்பார்க்கிறோம்.

# ஏட்டிக்குப்போட்டி



கல்கி

(ஒரு ஹாஸ்யக் களஞ்சியம்)

விலை ரூ. 4-8-0

தமிழ்ப்பண்ணை, தியாகராயநகர், சென்னை




மலர் 6 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 35

# என்ன சேதி?

## முக்கிய திருநாள்

உப்பு வரியைப் பற்றி நினைக்கும் போது, சென்ற முப்பது நாற்பது வருஷங்களாகக் காங்கிரஸ் மகா சபை நடத்தி வந்த போராட்டங்கள் எல்லாம் இந்த தேச மக்களுக்கு ஞாபகம் வரும். உப்புச் சத்தியாக்கிரகம் இந்திய சுதந்திரப் போராட்டத்தில் ஒரு முக்கியமான கட்டம். உப்பு வரி ஒழிய வேண்டுமென்பதற்காகத் தான் காந்தி மகான் பிரசித்தி பெற்ற தம்முடைய தண்டி யாத்திரையை ஆரம்பித்தார். ராஜாஜி வேதாரண்ய யாத்திரையை நடத்தினார். ஆயிரக் கணக்கான தொண்டர்கள் கைதியானது மாத்திரமல்லாமல், பலர் போலீஸ்காரர்களின் குண்டாந் தடிகளுக்கும் இலக்கானார்கள். சுருங்கக் கூறினால், உப்புச் சத்தியாக்கிரகம் சரித்திரப் புகழ்பெற்ற மறக்க முடியாத சம்பவமாகும்.

மேற்படி உப்பு வரியை ஒழிக்க வேண்டுமென்று காந்திஜி நடத்திய போராட்டமும் கண்ட கனவும் வரும் ஏப்ரல் மாதம் முதல் தேதி யன்று பரிபூரணமாக நிறைவேறப் போகிறது. வெள்ளைக்காரர்கள் போகிற போக்கில் அத்தகைய நல்ல காரியம் ஒன்றையாவது செய்து விட்டுப் போயிருக்கலாம். ஆனால், அவர்கள் அதைச் செய்ய வில்லை. நமது மாபெருந் தலைவர்கள் இந்திய அரசாங்கத்தை ஏற்றுக் கொண்ட பிறகு, அவர்களுக்குத்தான் உப்பு வரியை ஒழித்த பெருமை கிடைக்க வேண்டுமென்று இருந்தது போலும்!

தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியார் ஏப்ரல் 1-ம் தேதியை உப்பு வரி ஒழிப்பு தினமாகக் கொண்டாட வேண்டுமென்று செய்திருக்கும் தீர்மானத்தை வரவேற்கிறோம். தமிழ்நாடெங்கும் மேற்படி தினத்தை ஒரு முக்கிய திருநாளாகக் கொண்டாடித் தமிழ் மக்கள் தங்கள் மகிழ்ச்சியையும் குதூகலத்தையும் நன்கு தெரிவித்துக் கொள்வார்கள் என்று எதிர்பார்க்கிறோம்.

## கல் நெஞ்சம்

மலேயா ரப்பர்த் தோட்டங்களிலே இந்தியர்களும் சீனர்களும் வேலை செய்கிறார்கள். இருவரும் ஒரே மாதிரியான வேலையே செய்கிறார்கள். ஆனால், வெள்ளைக்காரத் தோட்ட முதலாளிகள் இந்தியர்களுக்கு ஒரு மாதிரியாகவும் சீனர்களுக்கு ஒரு மாதிரியாகவும் சம்பளம் கொடுக்கிறார்கள். இதற்குக் காரணம் பிரித்தாளும் கொள்கையே. சீனர்களுக்கும் இந்தியர்களுக்கு மிடையே பிளவு ஏற்படுத்தி, அவர்கள் இரண்டு பேரும் கழுத்தைப் பிடித்துக்கொண்டு நிற்கும்படியாகச் செய்துவிட்டால் தாங்கள் ஒரு தொந்தரவும் இல்லாமல் கொள்ளை லாபம் அடித்துக் கொண்டே யிருக்கலாம் அல்லவா?

இந்த அநியாயத்தையும் அக்கிரமத்தையும் எதிர்த்து, சென்ற மகா யுத்தம் ஆரம்பமாவதற்கு முன்னால் இந்தியர்கள் கிளர்ச்சி செய்தார்கள். ஆனால், மலேயா அரசாங்கம் இந்தியத் துருப்புகளையே இந்தியர்கள்மேல் ஏவிச் சுட்டுத் தள்ளினார்கள்.

இப்போது அங்கே மறுபடியும் மேற்படி சம்பளக் கிளர்ச்சி தோன்றி யிருக்கிறது. சம்பள உயர்வு கோரிய தொழிலாளரின் மேல் மலேயாப் போலீஸ் துப்பாக்கிப் பிரயோகம் செய்திருக்கிறது. அது மாத்திரம் அல்ல; இன்னும் பல கொடுமைகள் இழைத்ததாகவும் செய்திகள் வருகின்றன.

மலேயா சர்க்கார் மேற்படி கிளர்ச்சிக்குக் கம்யூனிஸ்டுகளின் தலை மேலே பழியைத் தூக்கிப் போட்டிருக்கிறார்கள்.

வாழ்க்கைச் செலவு இப்போது எவ்வளவோ உயர்ந்திருக்கிறது. இந்த நிலைமையில் தொழிலாளர் சம்பள உயர்வு கேட்பதிலே தவறு ஏதும் இல்லை. ஏழைத் தொழிலாளர் சம்பள உயர்வு கேட்டதற்குப் பதிலாக அவர்களுக்குத் துப்பாக்கிக் குண்டு கொடுப்பதைக் கல் நெஞ்சம் என்று சொன்னால் போதுமா?

வைஸ்ராய் மவுண்ட் பாட்டனின் முதல் வேலை இடைக்கால சர்க்காரிலுள்ள பிளவைச் சரிப்படுத்துதல் என்று சொல்லப் படுகிறது.

மாஸ்கோவில் கூடியிருக்கும் நாலு வல்லரசுகள் மகாநாடு நாளதுவரை ஒற்றுமைப் படாமல் 'குருடும் குருடும் குருட்டாட்டம்' ஆடும் கதையாகவே இருந்து வருகிறது.



# ஆசிய ஜோதி




புதுடில்லியில் 23உ. ஆரம்பமாகி நடைபெற்று வரும் அகில ஆசிய மகாநாடு உலகத்துக்கே ஒளி காட்டும் ஸ்தாபனமாக நீடுபெற்று விளங்கும் என்று எதிர்பார்க்கப் படுகிறது.

# சண்டமாருதத்தில் கப்பல்

இயற்கையின் ஆக்கிரகத்தினால் உலகில் சூருவளியும் பூகம்பமும் கடல் கொந்தளிப்பும் காட்டுத் தீயும் ஏற்படுகின்றன. இவை யெல்லாம் பயங்கரமானவைதான்.

ஆனால், மனிதனின் துராக்கிரகத்தினால் ஏற்படும் அரசியல் சண்டமாருதமோ, அவை யெல்லாவற்றையும் காட்டிலும் ஆயிரம் மடங்கு அதிக பயங்கரமும் கோரமுமானது என்று கூறுவது மிகையாகாது.

இயற்கையின் உற்பாதங்கள் சில நிமிஷ நேரத்தில் சில இடங்களை மாத்திரமே அழிக்கின்றன. அவைகளின் உக்ரம் சில நிமிஷங்களில் தணிந்தும் விடுகிறது. எனவே, அவைகளால் ஏற்படும் அழிவுக்கு எல்லை உண்டு.

ஆனால், அரசியல் சண்டமாருதத்தினால் ஏற்படக் கூடிய அழிவுக்கு எல்லையே இல்லை. மேற்படி சண்டமாருதம் மாதக் கணக்கிலும் வருஷக் கணக்கிலும் கோர தாண்டவம் புரிய ஆரம்பித்து விடுகிறது.

இயற்கையின் 'திருவிளையாடல்' போன்று அரசியல் சண்டமாருதம், குறிப்பிட்ட இடத்தில் மாடு, மனை, மக்கள், சுற்றம் இவைகளை அழிப்பதுடன் மாத்திரம் நின்று விடுவதில்லை.

அது தேசம் முழுவதையும் ஆட்டி வைக்கிறது. மனிதர் குலத்தின் மாண்பையே மண்ணாக்கி, நாட்டின் அமைதியையும் நிர்மூலமாக்கி விடுகிறது. அதனால் பலியுண்டவர்கள் போக மீதி யுள்ளவர்களும் நரக வேதனைக்கு ஆளாக நேருகிறது.

மற்றும், அது இறுதியாக மனிதனின் ஆத்மாவையும் கூட அழித்து, கோழைத்தனம், பயம், துவேஷம், வன்மம், சோர்வு முதலிய தீய குணங்களாகிற புல்லுருவி அவனுடைய ஹிருதயத்தில் படருமாறு செய்து விடுகிறது.

பாஞ்சாலப் படுகளங்கள் பூகம்பத்தைக் காட்டிலும் பயங்கரமாக இருக்கின்றன என்று சமீபத்தில் பண்டித ஜவாஹர்லால் நேரு கூறியதைக் கவனிப்போர், மேலே குறிப்பிட்ட உண்மையை அறிந்து கொள்ளலாம்.

எனினும், ஒரு விஷயத்தைச் சகலரும் ஞாபகத்தில் வைக்க வேண்டும்.

அதாவது, இயற்கை உற்பாதங்கள் மனிதனின் சக்திக்கு அப்பாற்பட்டவை. எனவே, அவைகளைத் தடுக்கவோ அல்லது அடக்கவோ மனிதனால் முடிவதில்லை.

அரசியல் சண்டமாருதம் அப்படியல்ல.

தெரிந்தோ, தெரியாமலோ அதைச் சிருஷ்டிப்பவன் மனிதன்தான். எனவே, அதைத் தடுப்பதோ அல்லது அடக்குவதோ மனிதனின் சக்திக்கு அப்பாற்பட்டதென்று சொல்லுவதற்கில்லை.

* * *

சென்ற மூன்றரை வருஷ காலமாய் இந்திய வைஸ்ராயாகவும், அதற்கு முன் இரண்டு வருஷங்கள் வரை இந்தியாவின் பிரதம தளபதியாகவும் இருந்த லார்டு வேவல், பதவியிலிருந்து திருப்பி யழைக்கப்பட்டுத் தமது குடும்பத்துடன் லண்டனுக்குச் சென்று விட்டார்.

புதிய வைஸ்ராய் லார்டு மவுண்ட்பாட்டன் அப் பதவியை ஏற்றுக் கொண்டு விட்டார்.

லார்டு வேவல் ஒரு சிறந்த போர் வீரர். போரில் மாத்திரம் வீரர் அல்ல; போரிலிருந்து பின் வாங்குவதிலும் வீரர்; தமக்கு ஏற்படும் தோல்விகளை மழுப்பாமலும் மறைக்காமலும் ஒப்புக் கொள்ளுவதிலும் வீரர்தான்.

அவரது மேற்படி குணத்துக்கு ஒரே ஒரு உதாரணம் போதுமானது.

லார்டு வேவல் கடைசியாக இந்திய மகா ஜனங்களிடம் விடை பெற்றுக் கொண்டு செய்துள்ள பிரசங்கத்தில் கூட, ''நான் எத்தனையோ தவறுகள் செய்திருக்கிறேன்'' என்று அப்பட்டமாக ஒப்புக் கொண்டு, தம்முடைய வாழ்க்கையில் தோல்விகள் அதிக

மாயினும் தாம் கண்ணியம் வாய்ந்த ஒரு சிப்பாய் என்பதை வெளிப்படுத்தி யிருக்கிறார்.

அவர் போர்முனைகளிலிருந்து படிப் படியாகப் பின்வாங்க நேரிட்டது போல், அரசியல் நிர்வாக முனையி லிருந்தும் இன்று அவர் பின்வாங்க நேரிட்டது வருந்தத் தக்கதுதான்.

இருந்தாலும் தாம் செய்ததெல்லாம் முற்றிலும் சரி என்று சாதிக்காமல், அவர் தமது தவறுகளை ஒப்புக் கொண்டிருப்பது பாராட்டுதற் குரிய தாகும்.

வேவல் நன்னோக்கம் உடையவர். வைஸராய் பதவி ஏற்றவுடன், அவர் பஞ்சத்தினால் பரிதவித்துக் கொண் டிருந்த வங்காளத்துக்குப் பறந்து சென்று பஞ்சத்தின் — உக்ரத்தைத் தணிப்பதில் ஓரளவு வெற்றியும் பெற்றார்.

ஆனால், அதே சுறுசுறுப்பை அவர் சமீப காலத்தில் காட்டாததால்தான் அவரது பதவிக்கு ஆபத்து வந்தது.

இந்தியா இன்று மகத்தான அரசியல் சண்டமாருதத்தால் சூழப் பட்டிருப்பதற்கும் அவரது தவறுகள் தான் காரணமெனலாம்.

இடைக்கால சர்க்கார் நிர்வாகம் ஆரம்பத்தில் வெகு ஜோராக நடை பெற்றது. அந்தச் சர்க்காரின் சீரை யும் செல்வாக்கையும் கண்டு மனம் வெதும்பிய ஐ. ஸி. எஸ். காரர்கள் வேவலைச் சூழ்ந்து கொண்டு தூபம் போட்டார்கள். வேவலும் அந்தச் சகுனிகளுடைய தூபத்துக்கு இரையா னார். இடைக்கால சர்க்காருக்கு இடை விடாமல் முட்டுக்கட்டை போடுவதற் குற்ற யுக்திகளையும் கண்டு பிடித்தார்.

அதன் விளைவாக, இந்தியாவின் எதிர்கால அரசியல் விஷயமாய் பிரிட் டிஷ் தொழிற்கட்சி சர்க்கார் போட் டிருந்த திட்டமே பாழாகி, மீண்டும் மகத்தான நெருக்கடி ஏற்படும்போல் இருந்தது.

அவ்வளவுதான்; தொழிற்கட்சி சர்க்கார் தங்களுடைய அந்தரங்க சுத்தியைத் தெரிவிப்பதற்காக, இந்தி யர்களிடம் முழு நிர்வாக அதி காரத்தையும் ஒப்படைக்கும் தேதி யைக் குறிப்பிட்டதுடன் லார்டு வேவலையும் திருப்பி யழைக்கத் தீர்மானித்தனர்.

அத் தீர்மானத்துக்கு இணங்கவே லார்டு வேவல் சென்று, லார்டு லூயி பிரான்ஸிஸ் ஆல்பர்ட் விக்டர் நிகோலஸ் மவுண்ட்பாட்டன் புது வைஸராயாக வந்துள்ளார்.

• • •

லார்டு மவுண்ட்பாட்டன் முன் னேற்றகரமான அரசியல் கொள்கை யுடையவர் என்றும், தொழிற் கட்சி சர்க்காரின் திட்டத்தைப் பூரணமாக அங்கீகரிப்பவர் என்றும் கூறப் படுகிறது.

பதவி ஏற்றவுடன் அவர் விடுத்திருக் கும் வேண்டுகோளும் மேற்படி அபிப் பிராயத்தை உறுதிப்படுத்துவதாக இருக்கிறது.

1948-ம் வருஷம் ஜூன் மாதத்துக் குள் இந்தியாவின் முழு நிர்வாகப் பொறுப்பையும் இந்தியர்களிடமே ஒப்புவிக்கப் பிரிட்டிஷ் சர்க்கார் தீர் மானித்து விட்டதால், அடுத்த சில மாதங்களில் இந்தியப் பிரச்னை திருப்தி கரமாகத் தீர்க்கப்பட்டுத்தான் ஆக வேண்டும் என்று ஐயந்திரிபுக்கு இட மின்றிப் புதிய வைஸராய் குறிப்பிட் டிருக்கிறார்.

மனமிருந்தால் வழி உண்டு என் பதில் திடமான நம்பிக்கை கொண் டுள்ள லார்டு மவுண்ட்பாட்டனின் எதிர்கால முயற்சி நிச்சயமாக வெற்றி பெறும்.

மவுண்ட்பாட்டன் நியமனத்தில் மற் றொரு விசேஷமும் அடங்கியிருக்கிறது.

அதாவது, இன்று அரசியல் சண்ட மாருதம் காரணமாக இந்திய நிர்வாகக் கப்பல் தத்தளித்துக் கொண்டிருக்கிற தல்லவா?

அக் கப்பலைக் கரை சேர்க்க ஒரு சிறந்த மாலுமி தேவை என்பதை உணர்ந்தே தொழிற் கட்சி சர்க்கார், பல போர்க் கப்பல்களை வெற்றிகர மாகக் கரை சேர்த்துள்ள முதல்தர மாலுமியான லார்டு மவுண்ட்பாட் டனை வைஸராயாக அனுப்பியுள்ளனர் போலும்.

வாழ்க்கையில் வெற்றியையே பூஷணமாகக் கொண்ட மவுண்ட் பாட்டன் இந்திய அரசியல் நிர்வாகக் கப்பலும் வெற்றிகரமாகக் கரை சேர உதவி புரிய வேண்டும்.

• • •

உலக அமைதியை உத்தேசித்தும் பிரிட்டனின் எதிர்கால க்ஷேமத்தை உத்தேசித்தும் பிரிட்டிஷ் சர்க்கார் போற்றத் தக்கதொரு திட்டமான முடிவுக்கு வந்திருக்கிறார்கள்.

இந்தியர்களிடம் முழு நிர்வாக அதிகாரத்தையும் மாற்றுவதுடன், அவ்வாறு மாற்றுவது முரண்பாடுகளோ முட்டுக்கட்டைகளோ எதுவுமின்றி சுமுகமாக நடைபெறுவதற்கான முறைகளையும் கைக்கொள்ள வேண்டுமென்பதே அவர்கள் செய்துள்ள முடிவாகும்.

அத்தீர்மானத்தை நிறைவேற்றவே, லார்டு மவுண்ட் பாட்டன் வைஸ்ராயாக அனுப்பப்பட்டிருக்கிறார்.

இதுவரை பிரிட்டிஷாருக்கு இந்தியாவை ஆட்சி புரிய வேண்டும் என்ற ஆசை இருந்து வந்ததால், ஜனங்களிடையே பிளவை உண்டு பண்ணும் சூழ்ச்சியில் இறங்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது.

இனி அவர்களுக்கு அந்த ஆசை இல்லையாதலால், பிரிக்க வேண்டிய நிர்ப்பந்தமும் ஏற்படக் காரணம் இல்லை.

ஆகையால், பிரிட்டிஷாருக்கு வெகு காலமாக இருந்துவரும் "பிரித்தாளும் தந்திரிகள்" என்ற கெட்ட பெயரை மாற்றி, இந்திய சமூகங்களுக்குள் ஒற்றுமையை ஏற்படுத்தியவர்கள் என்ற நற்பெயரையும் வாங்கிக் கொடுக்க வேண்டியது கடைசி வைஸ்ராயின் கடமையாகும்.

இனி இந்தியாவில் பிரிட்டிஷாருக்குப் பிரித்தாள வேண்டிய அவசியம் இல்லையெனில், உடனடியாக ஒரு கேள்வி எழுகின்றது.

அதாவது, பிரித்தாளுவதற்கு உடந்தையாக இருந்த 'நிர்வாக நிபுணர்'களான ஐ. ஸி. எஸ். காரர்கள், சமஸ்தான ரெஸிடெண்டுகள் இவர்களின் வர்க்கம் இனியும் நீடிக்கக் காரணம் உண்டா?

இக்கேள்விக்கு, "இல்லை, இல்லை!" என்ற பேரொலிதான் இந்தியா வெங்கும் முழங்கும்.

* * *

நிர்வாக மாற்றத்துக்குப் பூர்வாங்கமாக சமஸ்தான ரெஸிடெண்டு பதவிகளும், ஐ. ஸி. எஸ். உத்தியோகங்களும் அதி சீக்கிரத்தில் ரத்து செய்யப்படலாமென்று டில்லிச் செய்திகள் கூறுவது இந்திய மகா ஜனங்களுக்கு மிகுந்த திருப்தியைக் கொடுக்கும்.

வங்காளம், பாஞ்சாலம், வடமேற்கு எல்லைப்புற மாகாணம் முதலிய இடங்களில் சமீப காலமாக நிகழ்ந்துள்ள சம்பவங்கள், மேற்படி உத்தியோகங்களைத் தாமதமின்றி ரத்து செய்ய வேண்டிய அவசியத்தைத் தொழிற் கட்சி சர்க்காருக்கு வலியுறுத்தி இருக்கின்றனவாம்.

அதாவது, இடைக்கால சர்க்காருக்குக் கட்டுப்படாத உத்தியோகங்கள் எல்லாம் கூடிய சீக்கிரம் எடுபட்டு விடலாம்.

இவ்வாறாக, இடைக்கால சர்க்காருக்கு வெளியே உள்ள முட்டுக்கட்டைகள் ஒவ்வொன்றாகத் தகர்ந்துவிடும் என்பதற்கான அறிகுறிகள் தென்படுகின்றன. ஆனால், அந்தச் சர்க்காருக்கு உள்ளேயே இருக்கும் முட்டுக் கட்டைகளை அகற்ற வேண்டிய மகத்தான பொறுப்பு மவுண்ட் பாட்டனையே சார்ந்ததாகும்.

பிரிட்டிஷ் சர்க்கார் திட்டமும் லார்டு மவுண்ட் பாட்டனின் முயற்சியும் வெற்றி பெறுவது, மேற்படி பிரச்னை திருப்திகரமாகத் தீருவதையே பொறுத்திருக்கிறது.

எதிர் காலத்தில் ஆசியாவின் திலகமாக விளங்கப் போகும் இந்தியாவின் நீடித்த நட்பும் நல்லெண்ணமும் பிரிட்டனுக்குத் தேவையாயின், சர்வதேச நீதியையும் சம்பிரதாயங்களையும் அனுசரித்து லார்டு மவுண்ட் பாட்டன் இந்தியப் பிரச்னையைத் தீர்க்க முற்பட வேண்டும். பெரும்பான்மையோராயினும், சிறுபான்மையோராயினும் குறுக்கு வழிகளையோ கோணல் முறைகளையோ கைக்கொள்ள இடம் கொடுக்கக் கூடாது.

இந்தியாவில் இதுவரை எத்தனையோ வைஸ்ராய்கள் ஆட்சி புரிந்து சென்றிருக்கிறார்கள். ஆனால், அவர்களில் ஒருவருடைய ஆட்சியாவது பிரிட்டிஷாருக்குப் பெருமையளிப்பதாக இல்லை. அவர்களில் ஒருவராவது இந்தியர்களின் நன்றிக்குப் பாத்திரராகவில்லை.

எனவே, மற்ற வைஸ்ராய்களுக்குக் கிடைக்காத ஒரு பெரும் பாக்கியமும், அரிய சந்தர்ப்பமும் லார்டு மவுண்ட் பாட்டனுக்குக் கிடைத்திருக்கின்றன.

புதிய வைஸ்ராய் அவற்றைப் பூரணமாய்ப் பயன்படுத்திக்கொண்டு, அரசியல் சண்டமாருதத்தினால் தத்தளித்து வரும் இந்திய நிர்வாகக் கப்பலைப் பத்திரமாகக் கரை சேர்ப்பதுடன், பிரிட்டிஷ் அதிகார வர்க்கத்தையும், பிரிட்டிஷ் துருப்புகளையும் கூட அக்கரை கொண்டு போய்ச் சேர்ப்பாரென்று நம்புகிறோம்.

# அக்கப் போர்

"சக்கைப்போடு"

"ஓமந்தூர் ராமசாமி ரெட்டியார் தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பட்டதும் இன்னொருவரைப் பிரதம மந்திரியாக நியமிப்பார் என்று சொல்லப்பட்டதே? அப்படி ஏன் அவர் செய்யவில்லை?" என்று ஒரு நிருபர் கேட்கிறார்.

காரணம், அவர் "ஏமாந்த ராமசாமி ரெட்டியார் அல்ல" என்பதாயிருக்கலாம்.

★

கவியாளி ஸ்ரீ சரோஜனி தேவி அகில ஆசிய மகாநாட்டில் பின்வருமாறு பேசியிருக்கிறார் :—"முன்னேறுகிறோம்; முன்னேறுகிறோம்; முன்னேறுகிறோம்; முன்னேறுகிறோம். நட்சத்திரங்களை நோக்கி உயர்ந்து செல்கிறோம். நாம் நட்சத்திரமாக உயர்வதை யார் தடுக்க முடியும்?"

வேறு யாராலும் தடுக்க முடியாதுதான்! தடுத்தால், ஸினிமா புரொட்யூஸரும் டைரக்டரும்தான் தடுக்கலாம்!

★

"அடாடா! முழுசாக ஒரு வருஷமாவது பழைய மந்திரிகள் பதவி வகிக்க விட்டிருக்கக் கூடாதா? பதினொரு மாதத்திலேயே அவர்கள் இந்த கதியை அடைந்திருக்க வேண்டுமா?" என்று ஒரு நிருபர் அங்கலாய்க்கிறார்.

ஸ்ரீ பிக்கினி வெங்கடரத்னம் என்னும் பெயரையே அவர் மறந்து விட்டார்போல் காண்கிறது. பாவம்! இந்த மனிதர் பதின்மூன்றாவது மந்திரியாகி ஒரு மாதச் சம்பளமாவது முழுசாக வாங்கியிருப்பாரோ, என்னமோ தெரியவில்லை. அதற்குள்ளே அவருடைய உத்தியோகம் முடிவடைந்து விட்டதே! அனுதாபப் படுவதாயிருந்தால் இவருக்கல்லவா அனுதாபப்பட வேண்டும்?

★

"இந்தப் புதிய மந்திரி சபையின் ஆயுள் நீடித்திருக்குமா?" என்று சட்ட சபையில் ஒரு முஸ்லிம் லீக் அங்கத்தினர் கேட்டதற்கு, கனம் டாக்டர் சுப்பராயன், "அந்தக் கேள்விக்கு என்னால் பதில் சொல்ல முடியாது!" என்றாராம்.

"ஏதோ டாக்டர் சுப்பராயன் என்று சொல்கிறார்களே? அதனால் நாடி பார்த்துச் சொல்வாராக்கும்!" என்று அந்த முஸ்லிம் லீக் அங்கத்தினர் ஒருவேளை எண்ணியிருக்கலாம். கனம் சுப்பராயனுடைய 'டாக்டர்' பட்டம் வைத்தியப் பட்டமல்ல, சட்டப் பரீட்சையில் தேறிய பட்டம் என்பதை அந்த அங்கத்தினருக்குத் தெரிவித்துக் கொள்கிறோம்.

★

மற்றப்படி இந்த வாரத்து அக்கப் போர்ச் செய்திகளை அறிந்து கொள்ள விரும்புகிறவர்கள் மாஜி பிரதம மந்திரி பிரகாசம்காருவின் புலம்பலைப் பத்திரிகைகளில் படித்துக் கொள்ளலாம்.

இந்த வாரத்து அக்கப்போர் மட்டுமா?—நாலு வருஷத்து அக்கப்போர்ச் செய்திகளை அந்தப் பிரசங்கத்தில் காணலாம்.

1942-ல் சிறைக்குப் போன தேசபக்தத் தலைவர்கள் சிறைக்குள்ளேயே பிரதம மந்திரி பதவியைக் கைப்பற்றுவது பற்றிச் சதியாலோசனை செய்ததில் ஆரம்பித்து, நாளது வரையில் நடந்திருக்கும் அந்தரங்கப் பதவிப் போட்டிச் சூழ்ச்சிகளையெல்லாம் ஸ்ரீ பிரகாசம்காரு நன்றாக விளக்குப் போட்டுப் பிரகாசப் படுத்தியிருக்கிறார்.

எல்லாவற்றையும் கேட்டுப் படித்து முடித்த பிறகு எனக்குத் தோன்றிய யோசனை இதுதான் :—

"காங்கிரஸ்காரன் என்று சொல்லிக் கொள்ளும் யாருமே சட்ட சபைக்கோ, மந்திரி சபைக்கோ வரவே கூடாது;—காங்கிரஸிலேயே சம்பந்தப்படாத நல்ல மனிதர்களைப் பொறுக்கி எடுத்துச் சென்னையில் அரசாங்கம் நடத்தச் சொல்ல வேண்டும்."

மேற்படி யோசனையைத் தேசத்தின் நன்மைக்காக மட்டும் நான் சொல்லவில்லை. தியாகிகளும் எத்தனையோ தேசத் தொண்டு செய்தவர்களுமான காங்கிரஸ்காரர்களின் கௌரவத்தைக் காப்பாற்றுவதற்காகவே முக்கியமாகச் சொல்கிறேன்.

# சோலைமலை இளவரசி

## கல்கி



சந்திரா

## 16. கயிறு தொங்கிற்று!

இரவுக்கும் பகலுக்கும் அதிக வேற்றுமை யில்லாமல் இருள் சூழ்ந்திருந்த எட்டடிச் சதுர அறையில் குமாரலிங்கம் தன்னந் தனியாக அடைக்கப்பட்டிருந்தான்.

இரவிலே இரும்புக் கதவுக்குக் கொஞ்ச தூரத்தில் ஒரு கரியடைந்த ஹரிகேன் லாந்தர் மங்கிய சோகமான ஒளியைத் தயக்கத்துடன் வெளியிட்டுக் கொண்டிருந்தது.

பகலில், அவன் அடைபட்டிருந்த அறையின் பின்புறச் சுவரில் இரண்டு ஆள் உயரத்தில் இருந்த சிறு ஜன்னல் துவாரம் வழியாக மங்கிய வெளிச்சம் வரலாமோ, வரக்கூடாதோ என்று தயங்கித் தயங்கி எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தது.

குமாரலிங்கத்தின் உள்ளத்தின் நிலைமையும் ஏறக்குறைய வெளிப்புற நிலைமையை ஒத்திருந்தது. சூழ்ப்ப இருள் சூழ்ந்து எதைப்பற்றியும் தெளிவாகச் சிந்திக்க முடியாத நிலையை அவன் மனம் அடைந்திருந்தது. பார்த்தவர்கள் அவனுக்குச் 'சித்தப்பிரமம்' பிடித்திருக்கிறது என்று சொல்லும்படி தோன்றினான். ஆனாலும் இருள் சூழ்ந்த அவனுடைய உள்ளத்தில் சில சில சமயம் அறிவின் ஒளி இலேசாகத் தோன்றிச் சிந்திக்கும் சக்தியும் ஏற்பட்டது. அத்தகைய சமயங்களில், ஆகா! அவனுடைய மனதில் என்னவெல்லாம் எண்ணங்கள் குமுறி அலைமோதிக் கொண்டு பாய்ந்தன!

சோலைமலைக் கிராமத்தில் ஏழெட்டு மாதங்களுக்கு முன்னால் காந்தி குல்லாக் கதர் வேஷம் தரித்த போலீஸாரால் கைதி செய்யப்பட்டதிலிருந்து அவன் கண்டும், கேட்டும், அனுபவித்தும் அறிந்த பயங்கரக் கொடுமை நிறைந்த சம்பவங்கள், அதற்கு முன்னால் சோலைமலைக் கோட்டையில் கழித்த ஆனந்தமான பத்துப் பன்னிரண்டு தினங்கள், அதற்கு முந்தி தளவாய்க் கோட்டையில் ஒருநாள் நடந்த புரட்சிகரமான காரியங்கள், இன்னும் நூறு வருஷத்துக்கு முன்னால் சோலைமலை மாறனேந்தல் இராஜ்யங்களில் சேர்ந்த அபூர்வ நிகழ்ச்சிகள் எல்லாம் ஒன்றன்பின் ஒன்றாகவும் சில

சமயம் சேர்ந்தாற் போலவும் அவன் மனதில் தோன்றி அல்லோல கல்லோலம் விளைத்தன.

இத்தனைக்கும் மத்தியில், அவன் அறிவு தெளிவடைந்து சிந்தனை செய்து கொண்டிருக்கும் போதும் சரி, தெளிவில்லாத பலப் பல எண்ணங்கள் போட்டியிட்டுப் பாய்ந்து கொண்டிருக்கும் போதும் சரி, சிந்தனா சக்தியையே இழந்து 'பிரமம்' பிடித்து அவன் உட்கார்ந்திருக்கும் போதும் சரி, ஒரே ஒரு விஷயம் மட்டும் அவன் மனதிலிருந்து மறையாமல் எப்போதும் குடி கொண்டிருந்தது. அது அவன் தலைக்கு மேலே ஒரு வட்டச் சுருக்கிட்ட கயிறு,—அவனைத் தூக்கிட்டுக் கழுத்தை நெறித்துக் கொல்லப்போகிற கயிறு,—எப்போதும் தொங்கிக் கொண்டிருக்கிறது என்னும் பிரமைதான்.

அந்தக் கயிற்றிலிருந்து தப்ப வேண்டுமானால், அதற்கு ஒரே ஒரு வழிதான் உண்டு. முன்னொரு ஜன்மத்தில் தான் மாறனேந்தல் மகாராஜாவாகப் பிறந்திருந்தபோது, எந்த முறையைப் பின்பற்றி அவன் தூக்குக் கயிற்றிலிருந்து தப்பினானோ, அதே முறையையே இப்போதும் பின்பற்றியாக வேண்டும்.

அதாவது சிறைச்சாலையிலிருந்தோ போலீஸ் காவலிலிருந்தோ தப்பித்துக் கொண்டு ஓட முயல வேண்டும். தப்பி ஓட முயல்வது உயிர் பிழைக்க வேண்டுமென்ற ஆசையினால் அல்ல; உயிர் பிழைக்கலாம் என்ற நம்பிக்கையினாலும் அல்ல. அப்படித் தப்பி ஓட முயலும்போது முன்னொரு ஜன்மத்தில் நடந்தது போலவே சிறைக் காவலர்களோ போலீஸ்காரர்களோ தன்னை நோக்கிச் சுடுவார்கள். குண்டு அவன் முதுகிலே பாய்ந்து மார்பின் வழியாக வெளியே வரும். அதன் பின்னால் குபு குபுவென்று இரத்தம் பெருகும். அந்த க்ஷணமே அவன் உணர்விழந்து கீழே விழுவான். அப்புறம் மரணம்; முடிவில்லாத மறதி; எல்லையற்ற அமைதி.

குமாரலிங்கம் அப்போது விரும்பியதெல்லாம் இத்தகைய மரணம் தனக்குக் கிட்டவேண்டும் என்பதுதான். அவன் மரணத்துக்கு அஞ்சவில்லை; சாகாமல் உயிரோடிருக்க வேண்டும் என்று ஆசைப்படவும் இல்லை. ஆனால் தூக்கு மரத்தில் கயிற்றிலே தொங்கிப் பிராணனைவிட மட்டும் அவன் விரும்பவில்லை. அந்த எண்ணமே அவனுடைய உடம்பையும் உள்ளத்தையும் சொல்ல முடியாத வேதனைக்கு உள்ளாக்கிற்று. அவன் தூக்கு மரத்தைப் பார்த்ததில்லை; தூக்குப் போடும் காட்சி எப்படியிருக்கும் என்றும் அவனுக்குத் தெரியாது. எனவே தூக்குத் தண்டனை என்று நினைத்ததும், தாழ்ந்து படர்ந்த மரக்கிளையில் முடிச்சுடன் கூடிய கயிறு தொங்கிய காட்சி தான் அவனுக்கு நினைவு வந்தது. அத்தகைய மரக்கிளை ஒன்றில் அவனுடைய உடம்பு தூக்குப் போட்டுத் தொங்குவது போலவும், உடம்பிலிருந்து வெளியேறிய தன்னுடைய உயிர் அந்த உடம்பைச் சுற்றிச் சுற்றி வருவது போலவும் அடிக்கடி அவனுக்குப் பிரமை உண்டாகும். சில சமயம் விழித்திருக்கும்போதும், சில சமயம் அரைத் தூக்கத்திலும் அவனுக்கு இம்மாதிரி அனுபவம் ஏற்படும். அரைத் தூக்கத்தில் அத்தகைய அனுபவம் ஏற்படும்போது அது முற்றிலும் உண்மை நிகழ்ச்சிபோலவே இருக்கும். அப்போது குமாரலிங்கம், "கடவுளே!" என்று வாய்விட்டுக் கதறுவான். உடனே விழிப்பு உண்டாகும். அவன் உடம்பெல்லாம் சொட்ட வியர்த்து விட்டுச் சிறிது நேரம் வரையில் நடுங்கிக் கொண்டே யிருக்கும்.

இந்தமாதிரி பயங்கரம் நிறைந்த வாழ்க்கை இன்னும் எத்தனை நாளைக்கு வாழ வேண்டுமோ என்று எண்ணி எண்ணி அவன் ஏங்கத் தொடங்கினான். இந்தியா தேசத்துக்குச் சுயராஜ்யம் கிடைக்கும் என்ற நம்பிக்கையும் தனக்கும் தன்னுடைய சகோதரக் கைதிகளுக்கும் விடுதலை கிடைக்கும் என்ற ஆசையும் அவனுக்கு இப்போதெல்லாம் சிறிதும் இருக்கவில்லை. விசாரணைக்காகக் கோர்ட்டுகளுக்குப் போகும்போதும் திரும்பி வரும்போதும் மற்றப்படி அபூர்வமாக மற்ற சகோதர அரசியல் கைதிகளைச் சந்திக்கும்போதும், "சுயராஜ்யம் சீக்கிரம் வரும்" என்று யாராவது சொல்லக் கேட்டால், அவன் புன் சிரிப்புக் கொள்வான். சிறைப்பட்ட நாளிலிருந்து அவன் புன்னகை புரிவ

தென்பது இந்த ஒரு சந்தர்ப்பத்திலே தான் என்று சொல்லலாம்.

ஏனெனில், "சுயராஜ்யம்" என்ற வார்த்தை காதில் விழுந்ததும், அவன் சிறைப்பட்ட புதிதில் அடைந்த அனுபவங்கள் ஞாபகத்துக்கு வரும். தினம் தினம் புதிது புதிதாகத் தொண்டர்களைக் கைது செய்து கொண்டு வருவார்கள். ஒரு போலீஸ்காரர் இன்னொரு போலீஸ்காரரைப் பார்த்து, "இவர் பெரிய தேசபக்தர், அப்பா! இவருக்குக் கொடு, சுயராஜ்யம்!" என்பார். உடனே தடா, தடவென்று சத்தம் கேட்கும். அடி விழும் சத்தந்தான்! அடி என்றால் எத்தனை விதமான அடி? — சில தொண்டர்கள் பல்லைக் கடித்துக் கொண்டு பொறுத்திருப்பார்கள். வேறு சிலர் அலறுவார்கள். ஒவ்வொரு அடிக்கும் ஒவ்வொரு "வந்தேமாதர" கோஷம் செய்து நினைவு இழக்கும் வரையில் அடிபட்டவர்களும் உண்டு. இடையிடையே, "சுயராஜ்யம் போதுமா?" "சுயராஜ்யம் போதுமா?" என்ற கேள்விகளும் கிளம்பும்.

இந்தப் பயங்கர அனுபவங்களைக் குமாரலிங்கம் சொந்தமாக அனுபவிக்கவில்லை. சோலைமலைக் கிராமத்தில் அவனைக் கழுத்தைப் பிடித்துத் தள்ளியதும் அவன் மூர்ச்சையடைந்து விழுந்ததிலிருந்து போலீஸார் அவன் விஷயத்தில் ஜாக்கிரதையாகவே இருந்தார்கள். அதோடு ஸப் ஜெயிலில் முதன் முதலில் அவனை வந்து பார்த்த டாக்டர் அவனுக்கு இருதயம் பலவீனமாயிருக்கிறதென்றும், நாடி அடிப்பு அதிவிரைவாக இருக்கிறதென்றும் சொல்லி விட்டார். எனவே, குமாரலிங்கம் மேற்படி அனுபவங்களிலிருந்து தப்பிப் பிழைத்தான். ஆனால் மற்றவர்கள் பட்ட அடியெல்லாம் அவன் மனதில் என்றும் மறக்க முடியாதபடி பதிந்திருந்தது.

எனவே, "சுயராஜ்யம் வரப் போகிறது!" என்ற பேச்சைக் கேட்டாலே அவனுடைய முகத்தில் அவநம்பிக்கையோடு கூடிய துயரப் புன்னகை தோன்றுவது வழக்கமாயிற்று.

மேலும், அப்படி நடவாத காரியம் நடந்து, சுயராஜ்யமே வந்துவிட்டால் தான் என்ன? தனக்கும் அதற்கும் என்ன சம்பந்தம்? சுயராஜ்ய இந்தியாவில் தான் இருந்து வாழப் போவதில்லை! அது நிச்சயம்! நூறு வருஷத்துக்கு முன்னால் மாறனேந்தல் உலகநாதத் தேவனுக்கு என்ன கதி நேர்ந்ததோ, அதுதான் தனக்கு இந்த ஜன்மத்தில் நேரப் போகிறது! அதைப் பற்றிச் சந்தேகமேயில்லை.

சோலைமலை மணியக்காரர் வீட்டு முன்னிலையில் குமாரலிங்கம் கைதி செய்யப்பட்டதிலிருந்து அவனுக்குத் தன்னுடைய மானஸிகக் காட்சியில் பரிபூரண நம்பிக்கை ஏற்பட்டு விட்டது. ஏறக்குறைய எல்லா நிகழ்ச்சிகளும் அந்த ஜன்மத்தில் நடந்தது போலவே இப்போதும் நடந்து வருகிறதல்லவா?

கொஞ்ச நஞ்சம் இருந்த சந்தேகமும், சில நாளைக்கு முன்பு சோலைமலை மணியக்காரர் அவனைச் சிறையிலே பார்த்துப் பேசியதிலிருந்து அடியோடு நீங்கிவிட்டது. விதியென்னும் சக்கரம் சுழன்றுவரும் விந்தையே விந்தை! அதைக் காட்டிலும் பெரிய அதிசயம் இந்த உலகத்திலும் இல்லை; மறு உலகத்திலும் இருக்க முடியாது!

## 17. இரும்பு இளகிற்று!

விதி என்கிற விந்தையான சக்கரத்தைக் கொஞ்சம் பின்னுக்குச் சுழலும்படி செய்வோம்.

மாறனேந்தல் உலகநாதத் தேவர் ஆங்கிலேயரைப் பழி வாங்கும் பொருட்டுத் தம் உயிரைக் காப்பாற்றிக் கொள்ள எண்ணிச் சோலைமலைக் கோட்டைச் சின்ன அரண்மனையில் ஒளிந்து கொண்டிருந்த நாட்களுக்குச் செல்வோம்.

ஒரு மனிதன் சாதாரணமாய்த் தம் வாழ்க்கையில் பதினைந்து வருஷங்-

களில் அநுபவிக்கக் கூடிய ஆனந்த குதூகலத்தை யெல்லாம் பதினைந்து நாட்களில் அனுபவித்த உலககாதத் தேவரின் அரண்மனைச் சிறைவாசம் முடியும் நாள் வந்தது.

சோலைமலை மகாராஜா ஒரு நாள் மாலை தம் மகள் மாணிக்கவல்லியிடம் வந்து, "பார்த்தாயா, மாணிக்கம்! கடைசியில் நான் சொன்னதே உண்மையாயிற்று. இந்த வியவஸ்தை கெட்ட இங்கிலீஷ்காரர்கள் மாறனேந்தல் ராஜ்யத்தை உலககாதத் தேவனுக்கே கொடுக்கப் போகிறார்களாம். அந்தப்படி மேலே கும்பெனியாரிடமிருந்து கட்டளை வந்திருக்கிறதாம். உலககாதத் தேவனுடைய தகப்பன் கடைசிவரை போர் புரிந்து உயிரை விட்டானல்லவா? தகப்பனுடைய வீரத்தை மெச்சி மகனுக்கு இராஜ்யத்தைக் கொடுக்கப் போகிறார்களாம். அப்படித் தண்டோராப் போடும்படி மேஜர் துரை உத்தரவு போட்டிருக்கிறாராம். எப்படியிருக்கிறது கதை?" என்று சொன்னார். இதைக் கேட்டதும் மாணிக்கவல்லியின் முகத்தில உண்டான குதூகலக் கிளர்ச்சியையும் அவர் கவனித்தார். அதற்குப் பிறகு மாணிக்கவல்லி தான் பேசிய மற்ற விஷயங்களில் கவனம் செலுத்தாமல் ஒரே பரபரப்புடன் இருந்ததையும் பார்த்தார். "தூக்கம் வருகிறது, அப்பா!" என்று மாணிக்கவல்லி சொன்னதும், "சரி, அம்மா! தூக்கம் உடம்புக்கு ரொம்ப நல்லது; தூங்கு!" என்று சொல்லிவிட்டுப் போனார். ஆனால் வெகு தூரம் போய்விடவில்லை. சற்றுத் தூரத்தில் மறைந்திருந்து பார்த்துக் கொண்டிருந்தார்.



அவர் எதிர்பார்த்தது வீண் போக வில்லை. மாணிக்கவல்லி சிறிது நேரத்துக் கெல்லாம் அரண்மனையிலிருந்து வெளியேறுவதைக் கவனித்தார். அவள் அறியாமல் அவளைத் தொடர்ந்து சென்றார். பூந்தோட்டத்தின் மத்தியி லிருந்த வஸந்த மண்டபத்தில் தம்முடைய ஜன்மத் துவேஷத்துக்குப் பாத்திரனான உலகநாதத் தேவரை மாணிக்கவல்லி சந்தித்ததைப் பார்த்தார். அந்தச் சந்திப்பில் அவர்கள் அடைந்த ஆனந்தத்தையும் பரஸ்பரம் அவர்கள் காட்டிக் கொண்ட நேசத்தையும் கவனித்தார். சற்று முன் தாம் மகளிடம் சொன்ன செய்தியை அவள் உலகநாதத் தேவரிடம் உற்சாகமாகத் திருப்பிக் கூறியதையும் கேட்டார்.

சோலைமலை மன்னருக்கு அடக்க முடியாத ரௌத்ராகாரமான கோபம் வந்தது. தம் மடியில் செருகியிருந்த கத்தியை எடுத்துக் கையில் வைத்துக் கொண்டார். அவர்கள் இரண்டு பேரையும் ஏககாலத்தில் கொன்று விட வேண்டுமென்னும் எண்ணம் முதலில் தோன்றியது. ஆனால் மகள் மேல் அவர் வைத்திருந்த அளவில்லாப் பாசம் வெற்றி கொண்டது. எனவே, மாணிக்கவல்லி திரும்பி அரண்மனைக்குப் போன பிறகு உலகநாதத் தேவரை மட்டும் கொன்று விடுவது என்று உறுதியுடன் பல்லைக் கடித்துக் கொண்டிருந்தார். "இவனுக்கு ராஜ்யமாம், ராஜ்யம்! இந்தச் சோலைமலைக் கோட்டைக்கு வெளியே இவன் போயல்லவா இராஜ்யம் ஆளவேண்டும்?" என்று மனதிற்குள் கருவிக் கொண்டார். அத்தகைய தீர்மானத்துடன் அவர் மறைந்து நின்ற ஒவ்வொரு நிமிஷமும் அவருக்கு ஒரு யுகமா யிருந்தது. மாணிக்கவல்லியும் உலகநாதத் தேவரும் இலேசில் பிரிந்து போகிற வழியாகவும் இல்லை. நேரமாக ஆகச் சோலைமலை மகாராஜாவின் குரோதமும் வளர்ந்து கொழுந்து விட்டுக் கொண்டிருந்தது.

திடீரென்று மாணிக்கவல்லி விம்மும் சத்தத்தைக் கேட்டதும் அவருடைய தந்தையின் இருதயத்தில் வேல் பாய்வதுபோல் இருந்தது. இது என்ன? இவ்வளவு குதூகலமாகவும் ஆசையுடனும் பேசிக் கொண்டிருந்தவன் இப்போது ஏன் விம்மி அழுகிறான்? அந்தப் பாதகன் ஏதாவது செய்து விட்டானா, என்ன? அவருடைய கையானது கத்தியை இன்னும் இறுகப் பிடித்தது; பற்கள் நறநற வென்று கடித்துக் கொண்டன; உதடுகள் துடித்தன; புருவங்கள் நெறிந்தன. மூச்சுக் காற்று திடீரென்று அனலாக வந்தது.

ஆனால் அடுத்தாற்போல் உலகநாதத் தேவர் கூறிய வார்த்தைகளும் அதன் பின் தொடர்ந்த சம்பாஷணையும் அவருடைய கோபத்தைத் தணித்தன. அது மட்டுமல்ல; அவருடைய இரும்பு மனமும் இளகி விட்டது.

"என் கண்ணே! இது என்ன? இவ்வளவு சந்தோஷமான செய்தியைச் சொல்லிவிட்டு இப்படி விம்மி அழுகிறாயே? ஏன்? ஏதாவது தெரியாத்தனமாக நான் தவறான வார்த்தைகளைச் சொல்லி விட்டேனா? அப்படியானால் என்னை மன்னித்து விடு. பிரிந்து செல்லும்போது சந்தோஷமாகவும் முகமலர்ச்சியுடனும் விடை கொடு!" என்று பரிவான குரலில் சொன்னார் மாறனேந்தல் மகாராஜா.

"ஐயா! தாங்கள் ஒன்றும் தவறாகப் பேசவில்லை. இந்தப் பேதையிடம் தாங்கள் மன்னிப்புக் கேட்க வேண்டிய அவசியமில்லை. என்னுடைய தலைவிதியை நினைத்துத்தான்



நான் அழுகிறேன். எதனுலோ என் மனதில் ஒரு பயங்கர எண்ணம் நிலைபெற்றிருக்கிறது. தங்களை நான் பார்ப்பது இதுவே கடைசித் தடவை என்றும் இனிமேல் பார்க்கப் போவதே யில்லையென்றும் தோன்றுகிறது! ஏதோ ஒரு பெரும் விபத்து,—நான் அறியாத விபத்து,—எனக்கு வரப்போகிறதென்றும் தோன்றுகிறது!" என்று கூறி விட்டு மறுபடியும் சோலைமலை இளவரசி விம்மத் தொடங்கினுள்.

இதைக்கேட்ட உலகநாதத்தேவர், உறுதியான குரலில், "ஒருநாளும் இல்லை, மாணிக்கவல்லி! உன்னுடைய பயத்துக்கு ஆதாரமே யில்லை. இந்த வாழ்க்கையில் இனி உன்னைப் பார்க்காமல் இருக்க என்னுல் முடியவே முடியாது. நீ எதனுல் இப்படிப் பயப்படுகிருய் என்று எனக்குத் தெரியும். உன் தகப்பனுரைக் குறித்துத்தானே? அவருக்கு என்மேலுள்ள ஆவேஷத்தினுல் உன்னை நான் பார்க்க முடியாமல் போகும் என்றுதானே எண்ணுகிருய்?" என்ருர்.

"ஆம், ஐயா! அவருடைய மனதை நான் மாற்றிவிடுவேன் என்று ஜம்பமாகத் தங்களிடம் கூறினேன். ஆனுல் அந்தக் காரியம் என்னுல் முடியவே யில்லை. என்னுடைய பிரயத்தனங்கள் எல்லாம் வீணுகவே போயின. தங்களைப் பற்றி நல்ல வார்த்தை ஏதாவது சொன்னுல் அவருடைய கோபந்தான் அதிகமாகிறது. இப்போதுகூடத் தங்களுக்கு ராஜ்யம் திரும்பி வரப்போவது பற்றி அவர் வெகு கோபமாகப் பேசினுர். தங்களைப் பற்றிப் பேசுவதற்கே எனக்குத் தைரியம் வரவில்லை!" என்ருள் மாணிக்கவல்லி.

"கண்ணே! இதைப் பற்றி உனக்குச் சிறிதும் கவலை வேண்டாம். உன் தந்தையிடம் நீ என்னைப் பற்றிப் பேச வேண்டாம். ஏனெனில் நானே பேச உத்தேசித்திருக்கிறேன். மாறனேந்தல் இராஜ்யத்தைத் திரும்ப ஒப்புக் கொண்டதும் முதல் காரியம் நான் என்ன செய்யப் போகிறேன், தெரியுமா? உன் தந்தையிடம் வந்து அவர் காலில் விழுந்து என் குற்றங்களையெல்லாம் மன்னிக்கும்படி வேண்டிக் கொள்ளப் போகிறேன். உன்னை அடையும் பாக்கியத்துக்காக ஆயிரந் தடவை அவர் காலில் விழவேண்டுமானுலும் நான் விழுவேன். ஆனுல் அதுமட்டும் அல்ல. என்னுடைய குற்றத்தையும் நான் இப்போது உணர்ந்திருக்கிறேன். அவரை நான் நிந்தனை சொன்னதெல்லாம் பெருந்தவறு என்று இப்போது எனக்குத் தெரிகிறது. உண்மையில் அவர் சொன்னதுதானே சரி என்று ஏற்பட்டிருக்கிறது? இங்கிலிஷ்காரர்களைப் பற்றி நான் என்னவெல்லாமோ கெடுதல்களை நம்பினேன்; அவதூறு பேசினேன். அப்படிப்பட்டவர்கள் தோற்றுப் போன எதிரியின் வீரத்தை மெச்சி அவனுடைய மகனுக்கு இராஜ்யத்தைத் திருப்பிக் கொடுக்கச் சித்தமாயிருக்கிருர்கள். எப்படிப்பட்ட உத்தம புருஷர்கள்? அவர்களை நான் நிந்தனை செய்ததும், அவர்களோடு சேர்ந்து உன் தந்தையைக் குறை கூறியதும் குற்றந்தானே? ஆகவே உன் தந்தையிடம் நான் அவசியம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டேயாக வேண்டும். மன்னிப்புக் கேட்டுக் கொண்டு, உன்னை எனக்கு மணம் செய்து கொடுக்கும்படியும் கேட்பேன். அதற்கு அவர் சம்மதிக்காவிட்டால், அவருடைய கைக் கத்தியால் என்னைக் கொன்று விடும்படி சொல்வேன். அப்படி ஒரு வேளை உன் தகப்பனுர் கையினுல் நான் மடியும்படி நேர்ந்தால், அதற்காக நான் ஒரு சிறிதும் வருத்தப்பட மாட்டேன். அடுத்த ஜன்மத்திலாவது உன்னைத் தேடிக் கொண்டு வந்து மணம் புரிவேன். இது சத்தியம்! அதோ, வான வெளியில் மினுமினுக்கும் கோடானு கோடி நட்சத்திரங்களின் சாட்சியாக நான் சொல்லுவது சத்தியம்!"

இதை யெல்லாம் கேட்டதும் சோலைமலை மகாராஜாவின் கரையாத கல் மனமும் கரைந்து விட்டது; அவருடைய இரும்பு இருதயமும் உருகி விட்டது; கண்ணிலே கண்ணீரும் துளித்து விட்டது. அதற்கு மேல் அங்கு நிற்கக் கூடாதென்று எண்ணிச் சத்தம் செய்யாமல் அரண்மனைக்குத் திரும்பிச் சென்ருர். அன்றிரவெல்லாம் அவர் தூங்கவே இல்லை. சோலைமலைக் கோட்டையில் இன்னும் இரண்டு ஜீவன்களும் அன்றிரவு கண்ணை இமைக்கவில்லை. (தொடரும்)



# தமிழ் உயர்க!



ரா. கி.

தமிழ் நாட்டில் தமிழ் மொழி தழைத்து வளர்வது மட்டும் போதாது; உயர்ந்து ஓங்கவும் வேண்டும். தமிழ் தழைப்பதற்குரிய முயற்சிகளோடு தமிழை உயர்த்துவதற்குரிய முறைகளையும் தமிழ் மக்கள் தெரிந்து கடைப்பிடிக்க வேண்டும்.

"தமிழ் உயர்ந்திராமல் இப்போது மட்டும் தாழ்ந்தா கிடக்கிறது? தமிழ் உயர் தனிச் செம்மொழி அல்லவா? கைலையங்கிரியில் வீற்றிருக்கும் எம்பெருமான் அருளிய மொழியல்லவா? குன்றம் கொண்ட முருகனுக்கு உகந்த மொழியல்லவா? பொதிகை மலைமேல் குறு முனிவர் வீற்றிருந்து வளர்த்த மொழியல்லவா? தமிழை இன்னும் உயர்த்துவது எப்படி? தமிழ் தாழ்ந்திருக்கிறது என்றுதான் எப்படிச் சொல்லலாம்?" என்று தமிழ் அன்பர்கள் சண்டைக்கு வர வேண்டாம்!

தமிழ் உயர்ந்து சிறந்த ஒப்பற்ற மொழிதான்; ஐயமே இல்லை.

ஆயினும் சிற்சில விதங்களில் சிற்சில இடங்களில் தமிழை உயர்த்துவதற்கு இடமிருக்கத்தான் செய்கிறது.

உதாரணமாக, தமிழ் நாட்டுப் பள்ளிக்கூடங்களையும் கலாசாலைகளையும் குறிப்பிடலாம். தமிழ் நாட்டுக் கல்வி நிலையங்களில் இன்னமும் தமிழ் மகள் தாழ்வுற்றுத்தா னிருக்கிறாள்!

தமிழ் ஆசிரியர்களுக்கு அளிக்கப்படும் சம்பளத்தையும் மற்ற ஆசிரியர்களுக்கு அளிக்கப்படும் சம்பளத்தையும் ஒப்பிட்டுப் பார்த்து, மேலே நாம் கூறியதின் உண்மையை நேயர்கள் தெரிந்து கொள்ளலாம்.

கடைசியில், ரூ. அ. பை. பற்றிய செய்திதானா என்று நேயர்கள் சிலர் வெறுப்போடு கேட்கக்கூடும். அந்தோ! என்ன செய்யலாம்! இந்த உலகில் இன்னமும் ரூ.அ.பை.யின் வல்லமையும், அதனால் ஏற்படும் உயர்வு தாழ்வுகளும் போய்விடவில்லையே? இதைப் பற்றி ஐய மிருந்தால், உலகத்திலேயே இன்று உண்மை மனிதரெனப் பெயர் பெற்று விளங்கும் அமெரிக்க ஜனாதிபதி ட்ருமன் அவர்களைக் கேட்டுத் தெளிந்து கொள்ளலாமே!

* * *

தமிழ் நாட்டில் ஆங்கிலத்தை முதன்மை மொழியாகக் கொண்ட பள்ளிக்கூடங்களைப் பிரிட்டிஷார் ஏற்படுத்திய காலத்திலிருந்து தமிழ்ப் பண்டிதர்கள் அசட்டை செய்யப்படுவதும், எளனத்துக்கு உள்ளாவதும் வழக்கமாயிருந்து வருகிறது.

ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னால் "கமலாம்பாள் சரித்திரம்" என்னும் புதுக் கதை எழுதிய ஆசிரியர் ராஜமய்யர், பள்ளிக்கூடங்களில் தமிழ்ப் பண்டிதர்களின் நிலைமையை நன்கு விவரித்திருக்கிறார். அந்தக் கதையில் வரும் தமிழ்ப் பண்டிதர் அம்மையப்பப் பிள்ளை நம் மனக் கண் முன் வரும் போதெல்லாம் நமக்குச் சிரிப்பும் கூட வருகிறது; அதோடு அவமானமும் தொடர்ந்து வரத்தான் செய்கிறது.

ஸ்ரீ ராஜமய்யர் "கமலாம்பாள் சரித்திரம்" எழுதிய காலத்துக்குப் பிறகு, தமிழ்நாடும் தமிழும் எத்தனையோ முன்னேற்றம் அடைந்திருக்கின்றன. தமிழாசிரியர்களும் வெகுவாக முன்னேறியிருக்கிறார்கள். 'தமிழுண்டு, தாமுண்டு, பள்ளிக்கூட மாணவர் உண்டு' என்று தமிழ் ஆசிரியர்கள் இருந்த காலம் மாறி, "தமிழ் நாட்டுக்குத் தனிச் சுதந்திர அரசியல் வேண்டும்!" என்று கேட்கும் அளவுக்கு அவர்கள் உலக விவகாரங்களில் முன்னேறியிருக்கிறார்கள்.

ஆனால், தமிழாசிரியர்களுடைய சம்பளம் மட்டும் முன்னேற்றம் இன்றி முன் போலவேதான் இருந்து வருகிறது!

மற்றப் பாடங்கள் போதிக்கும் ஆசிரியர்களின் சம்பளத்தைக் காட்டிலும் தமிழ் ஆசிரியர்களின் சம்பளம் நமது கல்விக்கூடங்களில் குறைவாகவே இருந்து வருகிறது!

இது நியாயம் ஆகுமா? தமிழ் மொழியைக் குறைவுபடுத்துவது ஆகாதா?







## தமிழாசிரியர் பேசுகிறார்!

தமிழ்ப் புலவர்கள் சாதாரணமாக ஒன்றுபட்டு ஒரு முகமாகக் காரியம் செய்வதில்லை என்று சொல்வதுண்டு.

அந்த வழக்கத்துக்கு மாறாகச் சென்னை மாகாணம் முழுவதிலுமிருந்து முந்நூறு தமிழாசிரியர்களும் ஆசிரியைகளும் மார்ச் 1, 2களில் சென்னை செண்ட் மேரி மண்டபத்தில் மாபெரும் மகாநாடு கூடினார்கள். தமிழ், தமிழ்நாடு, தமிழாசிரியர் முன்னேற்றங்களைக் குறித்துப் பேசித் தீர்மானங்களும் செய்தார்கள்.

மேலே மகாநாட்டின் தலைவர் ஸ்ரீ ரா. பி. சேதுப் பிள்ளை விளங்குகிறார். வரவேற்புத் தலைவர் திரு வரதராசனார் இதோ வரவேற்புரை நிகழ்த்துகிறார். மகாநாடு மிகச் சிறப்பாக நடந்து முடிந்ததற்குப் பொறுப்பு வகித்த இன்னும் இரு ஆசிரியர், டாக்டர் சிதம்பரநாதச் செட்டியாரும் திரு மீனாட்சிசுந்தரனாரும் இதோ காட்சி தருகிறார்கள்.



புண்ணியம் செய்த நாளது 1947-ம் ஆண்டில் தமிழ்நாட்டு உயர்தரப் பள்ளிகளில் ஆங்கில ராணி இதுவரை அமர்ந்திருந்த முதன்மைப் பீடத்திலிருந்து அவளை இறக்கி விட்டோம். அந்தப் பீடத்தில் இப்போது தமிழ்த்தாய் கம்பீரமாக வீற்றிருக்கக் காண்கிறோம்.

இது ஆனந்தமான காட்சி; தமிழ் மக்கள் மகிழ்ந்து பூரிப்பதற்குரிய காட்சி.

ஆனால் தங்கச் சிங்காதனத்தில் தமிழ்த் தாயை அமரச் செய்துவிட்டு, அவள் பழைய கந்தல் துணிகளையே உடுத்தியிருக்கும்படி விடலாமா?

தமிழ்த் தாய்க்குத் தொண்டு செய்யும் தமிழ் ஆசிரியர்களை ஏழைமைக்கும் ஏளனத்துக்கும் ஆளாக விட்டிருக்கலாமா?

பொதுவாக, ஆசிரியர்களுக்கு அளிக்கப்படும் சம்பளம் இப்போது மிகக் குறைவு என்றும், அதிகமாக்க வேண்டும் என்றும் கிளர்ச்சி நடந்து வருகிறது.

அப்படிக் குறைந்த சம்பளம் வாங்கும் ஆசிரியர்களுக் குள்ளேயும் தமிழாசிரியர்களை மட்டும் தனியே பிரித்துத் தாழ்வுபடுத்த வேண்டுமா?

இது தமிழ் மொழியையே தாழ்வுபடுத்துவது ஆகாதா? தமிழ்த் தாய்க்கும் தமிழ் மக்களுக்கும் அவமானம் அல்லவா?

எனவே, நாளது மார்ச்சு ஆரம்பத்தில் சென்னையில் திருவாளர் ரா. பி. சேதுப்பிள்ளை அவர்கள் தலைமையில் கூடிய மாகாணத் தமிழாசிரியர் மகாநாடு மேற்படி சம்பள வேற்றுமையை நீக்க வேண்டுமென்று தீர்மானம் நிறைவேற்றியிருப்பது மிகவும் நியாயமான கோரிக்கையாகும்.

மேற்படி கோரிக்கையை நாம் முழு மனதுடன் ஆதரிக்கிறோம். தமிழ் ஆசிரியர்களுக்கும் மற்றப் பாடங்களைக் கற்பிக்கும் ஆசிரியர்களுக்கும் ஒரே தரமான சம்பளத் திட்டம் இருக்க வேண்டுமென்று வற்புறுத்துகிறோம்.

* * *

தமிழாசிரியர் மகாநாட்டின் மற்றத் தீர்மானங்களைப் பார்க்கும்போது, காலப் போக்கை யொட்டித் தமிழாசிரியர்கள் எவ்வளவு முன்னேற்ற மடைந்திருக்கிறார்கள் என்பது நன்கு புலனாகிறது. முக்கியமாக, மேற்படி மகாநாட்டின் நாலாவது தீர்மானம் நமது கவனத்தைக் கவருகிறது.

“தமிழ்நாட்டுக் கலாசாலைகளிலும் பள்ளிக் கூடங்களிலும் தற்போது வழங்கும் தமிழ்ப் பாட திட்டங்களைப் பரிசீலனை செய்வதற்கும், தமிழ் அன்பும் தமிழ்ச் சுவையும் மாணாக்கர்களுக்கு உண்டாகும் முறையில் மேற்படி பாட திட்டங்களை மாற்றி அமைக்க யோசனைகளைச் சொல்வதற்கும் பின்வரும் எழுவர் அடங்கிய குழு அமைக்கப்படுகிறது.”

இந்தத் தீர்மானத்தை நாம் பெரிதும் வரவேற்றுப் பாராட்டுகிறோம்.

தீர்மானத்தைப் படித்ததும் முதலில் வாசகர்களுக்கு, — முக்கியமாக மாணவர்களுக்கு, — ஒருவகை அச்சம் ஏற்படக் கூடும். “ஏற்கெனவே தமிழ்ப் பாடங்கள் மிகக் கடினமாக இருக்கின்றன. தமிழாசிரியர்கள் பரிசீலனை செய்து அப் பாடங்களை மேலும் கடினமாகச் செய்து தொலைக்கப் போகிறார்களே!” என்று திகில் ஏற்படக் கூடும்.

ஆனால் தமிழாசிரியர் மகாநாட்டு வரவேற்புத் தலைவர் திரு மு. வரதராசனாரின் வரவேற்பு உரையைப் படித்தால் அத்தகைய அச்சத்துக்கு இடமில்லையென்று தெரிந்து கொள்ளலாம்.

“பாட நூல்களில் பழைய இலக்கிய இலக்கணங்களுள் பயன் குறைந்தவை சிலவற்றைத் தயங்காமல் நீக்கிவிட வேண்டும். அவற்றை வேண்டியவர் வேண்டியபோது வேண்டிய அளவு கற்றுக் கொள்ளலாம் என ஒதுக்கிவிட வேண்டும். அவற்றிற்கு ஈடாக அறிவியல் அரசியல் நூல்கள் சிலவற்றைக் கற்குமாறு பாடத் திட்டங்களை மாற்றி அமைக்கவேண்டும்” என்றும்,

“வித்வான் தேர்வும் மற்றத் தமிழ்த் தேர்வுகளும் நினைவாற்றலை மட்டும் தேர்ந்தறிவனவாக இருக்கின்றன......எழுத்து எழுத்தாகக் கற்று வரிவரியாகப் படித்து வாக்கிய வாக்கியமாக விடை எழுதிவிட்டு நினைவாற்றலை மட்டும் புலப்படுத்தும் முறையே இப்போது உள்ளது. ‘இது என்றது எதனை?’ ‘அது என்றால் என்ன?’ ‘கோடிட்ட சொல் எவரைக் குறிக்கும்?’ என்பதைப் போன்ற நினைவை ஆராயும் சிறு பிள்ளைக் கேள்விகளை உயர்ந்த வகுப்புத் தேர்வுகளில் கேட்கும் முறை மாறிப் போக வேண்டும்” என்றும் திரு வரதராசனார் கூறியுள்ளார்.

தமிழ்ப் பாட திட்டத்தின் கேடுகளைப் பற்றித் தமிழாசிரியர் ஒருவர் தமிழாசிரியர் கூட்டத்தில் இவ்வளவு தெளிவாக மனம் விட்டுப் பேசுவது இதுவே முதல் தடவை என்று கருதுகிறோம்.

திரு மு. வரதராசனாரின் மேற்படி கூற்றில் ‘சிறு பிள்ளைக் கேள்விகள்’ என்னும் தொடரை மட்டும் நாம் ஆட்சேபிக்

கிறோம். ஏனெனில் அத்தகைய பயனற்ற அசட்டுக் கேள்விகளை உயர்ந்த வகுப்புகளிலேதான் கேட்கக் கூடாது, சிறு பிள்ளைகளின் தலையிலே தாராளமாய்ப் போடலாம் என்னும் கருத்து அதிலே தொனிப்பதாயிருக்கிறது. கூடவே கூடாது! வயது மிக்கவர்களுக்கு அத்தகைய கேள்விகள் அவசியமில்லை என்றால், சிறு பிள்ளைகளுக்கு அந்தக் கேள்விகளைப் போடுவது குழந்தைகளைக் குரூரமாகக் கொடுமை செய்வதாகும்!

திரு மு. வரதராசனாரின் வரவேற்புரை இன்னும் பல சிறந்த கருத்துக்களைக் கொண்டதாயிருப்பது மிக்க மகிழ்ச்சி தருகிறது. தமிழ் வசன நடையைப் பற்றி அவருடைய கருத்தைக் கேளுங்கள் :—

“தமிழ் மொழி மக்களுக்குப் பயன்படுகின்றதா என்றும், நாம் மக்களுக்குப் பயன்படுகின்றோமா என்றும் அடிக்கடி எண்ணிப் பார்க்க வேண்டும்.....நாம் பேசும் தமிழும் எழுதும் தமிழும் இயன்றவரையில் மக்களுக்கு விளங்கும் எளிய நடையில் அமைய வேண்டும்.”

இந்த அருமையான தெளிந்த கருத்தில், ‘இயன்ற வரையில்’ என்னும் குழப்பத் தொடர் சேர்த்திராவிட்டால் மிக நன்றாயிருந்திருக்கும். போனால் போகட்டும்: தமிழாசிரியர் ஒருவர் ‘எளிய நடை வேண்டும்’ என்று சொன்னதே பெரிய காரியந்தான்.

திரு மு. வரதராசனாரின் நீண்ட வரவேற்புரையில் கண்ட கருத்துக்களை ஒப்புக்கொண்டு தமிழ்ப் பாடதிட்டங்களும் பொதுவாகத் தமிழ்க் கல்வியும் அமையுமானால் தமிழ் மொழி விரைவில் மிக்க உயர்வை அடையும். திரு ரா. பி. சேதுப் பிள்ளை அவர்கள் தமது தலைமை உரையில் வெளியிட்டிருக்கும் ஆனந்தக் கனவு விரைவிலேயே நிறைவேறும். “எட்டுத் திசையிலும் தமிழ் நாடு ஏற்றமுற்று விளங்கும்” அற்புதக் காட்சியை நம்முடைய காலத்திலேயே நாம் கண் முன்னே காணலாம்.

## ஆலயப் பிரவேச வைபவங்கள்

திருக்கோஷ்டியூர் திருக்கோவிலும் ஹரிஜனங்களுக்காகத் திறந்து விடப்பட்டது. ராமானுஜ முனிவர் திவ்ய திருமந்திரோபதேசம் செய்தது இந்தக் கோபுரத்திலிருந்துதான்.

கண்களைக் கவரும் சிறப்பு வாய்ந்த காளையார் கோவில் ஆலயப் பிரவேச வைபவத்தை நடத்தி வைத்த சிவகங்கை ராஜா சாகேப், ஸ்ரீ ஜே. ஷண்முகம் பிள்ளை, ஸ்ரீ வி. ஐ. முனுசாமிப் பிள்ளை முதலியோர் ஹரிஜன பக்த கோடிகளுடன் நிற்கின்றனர்.



# பரீட்சை விபரீதம்!



"எஸ். எஸ். எல். ஸி. பரீட்சைக் கேள்விப் பேப்பர் ஒன்றரையணா, ஒன்றரையணா!"



"அடேய், அது வேண்டாம். அங்கே விடையுடன் விற்கிறார்களாம்! வா, போவோம்!"



"பரீட்சைப் பேப்பருக்காக ஏன் வீணாய்க் காத்திருக்கிறீர்கள்? உங்களுக்கு நான் கேள்வி, விடை எல்லாம் முந்தியே தெரியுமே, எழுதுங்களேன்!"



"சகுனம் என்ன பண்ணும்? 100-க்கு 100 மார்க் வாங்குகிறேன், பார்!"



பரீட்சையை ஒத்தி வைத்து விட்டார்களாமே! அப்பவே சகுனம் பார்த்துப் போடான்னேனே!

# சகோதரி லலிதா

## விந்தன்

அந்தச் சம்பவம் அப்படியொன்றும் விசேஷமானதல்ல; சர்வ சாதாரணமான சம்பவம்தான். ஆனாலும் அதன் விளைவுதான் எவ்வளவு மகத்தானது!

விஷயம் வேறொன்றுமில்லை; என் சகோதரி லலிதாவிடமிருந்து அன்று எனக்கு ஒரு கடிதம் வந்திருந்தது. அந்தக் கடிதம் எங்கள் தாம்பத்ய வாழ்க்கையில் அப்பேர்ப்பட்ட புயலைக் கிளப்பிவிடும் என்று நான் கொஞ்சமும் எதிர்பார்க்கவில்லை. லலிதாவும் அந்தக் கடிதத்தில் அப்படியொன்றும் எழுதியிருக்கவில்லை. என்னையும் மன்னியையும் பார்க்க அவளுக்கு ஒரே ஆவலாய் இருப்பதாகவும் அதனால் என் வீட்டுக்கு வந்து பத்து நாட்கள் தங்கியிருக்கப் போவதாகவும்தான் எழுதியிருந்தாள்.—அடேயப்பா! எத்தனை வருடங்களுக்குப் பிறகு அவளுக்கு இந்த ஆவல் தோன்றியிருக்கிறது!

சின்னஞ் சிறு வயதில் நாங்கள் எவ்வளவோ அன்புடனும் ஆர்வத்துடனும் பழகினோம். ஒருவரையொருவர் திட்டிக் கொண்டாலும் சரி, அடித்துக் கொண்டாலும் சரி, எங்கள் அன்பு அந்த நாளில் எந்த விதமான பங்கமும் அடைந்ததில்லை. ஆனால், அவளுக்கும் எனக்கும் உற்ற வயது வந்துவிட்டபோது, எங்களுக்கு இடையேயிருந்துவந்த அன்பு கொஞ்சம் கொஞ்சமாகக் குன்றத்தான் செய்தது.

அவள் யாரோ முன்பின் தெரியாத ஒருவனைக் கல்யாணம் செய்துகொண்டு அவனுடனேயே ஐக்கியமாகி விட்டாள்; நானும் முன்பின் தெரியாத ஒருத்தியைக் கலியாணம் செய்து கொண்டு அவளுடனேயே ஐக்கியமாகி விட்டேன்!

என்ன இருந்தாலும் இந்தக் கல்யாணத்தைப் போன்ற பொல்லாதது வேறொன்றும் இருக்க முடியாது போலிருக்கிறது!—அதிலும் இந்த நாசமாய்ப் போன




‘பெரியோர் நிச்சயித்த வண்ணம்’ நடந்த கலியாணங்கள் என்றால் சொல்லவா வேண்டும்?

இல்லை, இத்தனை நாட்களுக்குப் பிறகுதான் வருகிறாளே — இன்றோ அல்லது நேற்றோ வந்திருக்கக் கூடாதா? நாளைக்கு



வருகிறாளாம். நான்தான் இன்றே ஒரு 'கேஸ்' விஷயமாக வெளியூருக்குப் போக வேண்டியிருக்கிறதே? — திரும்பி வந்து தான் அவளைப் பார்க்க வேண்டும்! — சரி, அவளிடம் சொல்லி விட்டாவது போவோமா?

"யார் அங்கே, சரசுவா?"

"ஆமாம், என்னவாம்?"

"என்னடி, ஒன்றுமில்லாததற்கெல்லாம் இப்படி அலுத்துக் கொள்கிறாயே?"

"இல்லேன்னு, இங்கே ஆனந்தம் பொங்கி வழிகிறதாக்கும்!"

"சரி சரி, எனக்கு முன்னாலேயே நீ இந்தக் கடிதத்தைப் படித்துப் பார்த்து விட்டாயாக்கும்?"

"இந்த வீட்டில் எனக்குவேறு வேலை ஏதாவது இருக்கா, என்ன? உங்களுக்கு வரும் கடிதங்களையெல்லாம் படித்துக் கொண்டிருப்பது தான் என்னுடைய வேலை!"

"வீணாகப் பேச்சை வளர்த்தி என்னுடைய வெறுப்புக்கு மேலும் மேலும் ஏன் ஆளாகிறாய்? இதனால் நீயும் வாழ்க்கையில் சுகத்தைக் காணப் போவதில்லை; நானும் காணப் போவதில்லை. பேசாமல் சொல்வதைக் கேள்: நாளைக் காலை வண்டியில் லலிதா வந்து சேருகிறாளாம். எத்தனையோ வருடங்களுக்குப் பிறகு வருகிறாள்; அதுவும் தன்னந் தனியாக வருகிறாள். என்ன மனக் கஷ்டத்துடன் வருகிறாளோ, என்னமோ! இப்பொழுது நாம்தான் அவளுக்குத் தாயும் தந்தையும்போல. நீ நினைப்பது போல் அவள் இந்த வீட்டுக்கு எஜமானியாக வரவில்லை; விருந்தாளியாகத்தான் வருகிறாள். அவள் வந்து இங்கே ஒரு பத்து நாட்கள் இருந்துவிட்டுப் போவதால் உனக்கோ எனக்கோ பிரமாதமான கஷ்டம் ஒன்றும் வந்து விடப் போவதில்லை. அப்படியே ஏதாவது கஷ்டம் வருவதாயிருந்தாலும் அதற்காக நாம் மனிதத் தன்மையை இழந்து விடுவதா, என்ன? பணம் இன்று போகும்; நாளை வரும்......"

"ஆமாம், வெறும் வாய்ப் பேச்சில் தான் பணம் இன்று போகும்; நாளை வரும். காரியத்தில் ஒரு நாளும் வரவே வராது!"

"அதிகப்பிரசங்கித்தனமாக ஏதாவது உளறாதே! பெற்று எடுத்த பாசமும், உடன் பிறந்து வளர்ந்த பாசமும் போனால் வராது. அவளுடைய துரதிர்ஷ்டமோ, என்னுடைய துரதிர்ஷ்டமோ — இன்று இரவே நான் அவசியம் ஊருக்குப் போக வேண்டியிருக்கிறது. நாளைக் காலையில் நீயே ராஜுவுடன் ஸ்டேஷனுக்குப் போய் அவளை முகம் கோணாமல் அழைத்து வா! வஞ்சனையில்லாமல் அவளுக்குச் செய்ய வேண்டியதைச் செய்......"

"பேஷாய்ச் செய்து கொள்ளுங்கள்! நான் வேண்டாமென்று சொல்லவில்லை..."

"இதோ பார், சரசு! நீ இப்படி கரிக்கும்படியாக அவள் உனக்கு என்ன தீங்கு செய்தாள், என்னுடன் பிறந்ததைத் தவிர! — உன்னைப் பற்றி அவள் இந்தக் கடிதத்தில் எழுதியிருப்பதைப் பார்த்தாயா? 'கல்யாணத்துக்குப் பிறகு மன்னியை ஒரே ஒரு முறைதான் பார்த்தேன். இன்னொரு முறை பார்க்க வேண்டுமென்று என் உள்ளம் துடியாய்த் துடித்துக் கொண்டிருக்கிறது. ராஜுவைப் பெற்றெடுத்த பிறகு அவளுடைய உடல் நலம் சரியாயிருக்கிறதா, அண்ணா......?"

"இல்லை, இன்னும் கொஞ்ச நாளைக்கெல்லாம் போயே போய் விடுவாள்! நீ வந்து இங்கே 'ஹாய்'யாக இருக்கலாம் என்று எழுதுங்கள்! பாவம், கவலையற்று இருக்கட்டும்!"

"சீசீ! இதென்ன சரசு, நீ ஒரேயடியாய் இப்படிக் கெட்டு விட்டாயே!......"

"நான் ஒன்றும் கெட்டுப்போகவில்லை..."

"உன்னிடம் மட்டும் அல்ல; உன்னைப் போன்ற பெண்களிடமே என்னைப் போன்றவர்கள் நியாயத்தை எதிர்பார்ப்பது மடமைதான்!"

"அப்படிச் சொல்லுங்கோ! அதில் உங்கள் தங்கையும் சேர்ந்தவள் தானே?"

"இப்படியெல்லாம் குதர்க்கம் செய்து கொண்டிருந்தால் அதற்கு முடிவேயிராது!"

"அதைப் பற்றி உங்களுக்குக் கவலையே வேண்டாம்; நான் நாளைக்கே ஊருக்குப் போகிறேன்!"

"நீ சொல்வது கொஞ்சங்கூட நன்றாயில்லை, சரசு! அவள் வரும்போது நானும் ஊருக்குப் போவது, நீயும் ஊருக்குப் போவது என்றால் அதைத் தெய்வம் என்று ஒன்று இருந்தாற்கூட மன்னிக்காது!—எதற்கும் ஒரு எல்லையுண்டு. என் பொறுமையை அளவுக்கு மீறிச் சோதிக்காதே!"

"என் பொறுமைக்கும் ஒரு எல்லையுண்டு; என்னையும் நீங்கள் அளவுக்கு மீறிச் சோதிக்க வேண்டாம்!" என்று எரிந்து விழுந்து விட்டு, அவள் அண்ட சராசரங்களும் கிடுகிடென்று நடுங்கும்படி நடந்து, என் அறையை விட்டு அகன்றாள்.

★

ஊருக்குப் போன விஷயம் ஒருவாறு முடிந்ததும், மறுநாளே அவசர அவசரமாகத் திரும்பி வந்தேன். நல்ல வேளையாக என் மனைவி தான் சொன்னபடி பிறந்தகத்துக்குப் போய் விடவில்லை; எதையோ பறி கொடுத்தவள்போல் முகத்தைத் தொங்க விட்டுக்கொண்டு அங்கு மிங்குமாக நடமாடிக் கொண்டிருந்தாள்.

கூடத்தில் உட்கார்ந்து ஏதோ புத்தகம் வாசித்துக் கொண்டிருந்த லலிதா, என்னைக் கண்டதும் எழுந்து நின்றாள்.

"என்ன, லலிதா! பிரயாணமெல்லாம் சௌகரியமாயிருந்ததா?" என்று விசாரித்தேன்.

"இருந்தது, அண்ணா!" என்றாள் அவள்.

"ஸ்டேஷனுக்கு மன்னி வந்திருந்தாளோ, இல்லையோ?"

"இல்லையே! நானேதான் 'டாக்ஸி' வைத்துக் கொண்டு வீடு வந்து சேர்ந்தேன்!" என்றாள் அவள்.

அவ்வளவுதான்; எங்கிருந்தோ இதை ஒட்டுக் கேட்டுக் கொண்டிருந்த சரசு ஓடோடியும் வந்து, "வந்ததும் வராததுமாகக் கலகத்துக்கு வழி வைத்து விட்டாயோ இல்லையோ. போ! இதற்குத்தான் அத்தனை தூரத்திலிருந்து இங்கே இவ்வளவு அவசர அவசரமாக வந்தாயாக்கும்!" என்றாள் லலிதாவை நோக்கி.

லலிதா திடுக்கிட்டு விட்டாள்; நானும் திடுக்கிட்டு விட்டேன். யாரை, யார் என்ன சொன்னார்கள் என்று ஒன்றுமே புரியவில்லை. ஆனால், சரசுவுக்கு மட்டும் ஏதோ புரிந்திருக்கிறதே! — ஆச்சரியந்தான்! இப்படி எத்தனை எத்தனை ஆச்சரியமான நிகழ்ச்சிகள், அக்கிரமமான வம்புகள் தாம்பத்ய வாழ்க்கையில்? — ஆனாலும் உலகம் பெண்களுக்காகத்தானே கண்ணீர் விட்டுத் தொலைக்கிறது!

விஷயத்தை மேலும் வளர்த்தினால் விரஸமாய்ப் போய்விடும் என்று அஞ்சி,

அத்துடன் விட்டு விட்டேன். சாசுவும் வெற்றியுடன் பின் வாங்கி வேறு காரியத்தில் ஈடுபட்டாள்.

லலிதாவின் கண்கள் கலங்கின; என் மனம் தாங்கவில்லை. அவளைத் தனியே மாடிக்கு அழைத்துக் கொண்டு போய், "என்ன செய்யலாம், அம்மா? எல்லாம் நான் அவளைக் கல்யாணம் செய்து கொண்ட குற்றம்! உலகத்தில் தைரியமிருந்தால் எத்தனையோ குற்றங்களைத் திருத்திக் கொள்ள வழியிருக்கிறது. ஆனால் ஆணுக்கும் சரி, பெண்ணுக்கும் சரி, — இந்தக் கய்யாணம் செய்து கொண்ட குற்றத்தை மட்டும் திருத்திக் கொள்ளுவதற்கு ஒரு வழியும் இல்லையே!" என்றேன்.

"அதற்கு யார்தான் என்ன செய்ய முடியும், அண்ணா! — எனக்கு ஒன்று தோன்றுகிறது: இங்கே இருந்து கொண்டு நான் உங்கள் அமைதியைக் குலைப்பதைக் காட்டிலும் நாளைக்கே ஊருக்குத் திரும்பிப் போய் விடுவது நல்லதல்லவா?"

"என்ன இருந்தாலும் நீ புத்திசாலி, லலிதா! நான் இன்றைக்கே உனக்கு ஒரு புடவை வாங்கி வந்து வைத்து விடுகிறேன். அதைப் பெற்றுக் கொண்டு நீ சந்தோஷமாய்ப் போய் வா! சமயம் வாய்க்கும்போது நானே அங்கு வந்து உன்னைப் பார்த்துக் கொள்கிறேன். என்னுடைய நிலையைக் கண்டு நீ கோபித்துக் கொள்வதற்குப் பதிலாக இரக்கம் காட்டுவாயென்றே நம்புகிறேன்......"

"உங்கள்மீது எனக்குக் கோபம் ஒன்றும் இல்லை, அண்ணா!......" என்று ஆரம்பித்தாள் அவள்.

"என்மீது மட்டும் வேண்டிய கோபம் இருக்கிறதோ, இல்லையோ?" என்றாள் திடீரென்று அங்கே வந்த சாசு.

"உங்கள் மீதும் எனக்குக் கோபம் ஒன்றும் இல்லை, மன்னி!" என்றாள் லலிதா.

பொங்கி வந்த ஆத்திரத்தை என்னால் அடக்க முடியவில்லை. சாசுவின் கையைப் பிடித்துத் தரதர வென்று இழுத்துக் கொண்டு வந்து கீழே விட்டேன்.

அதற்கு மேல் ஒரு நிமிஷங்கூடத் தாமதியாமல் உடனே சென்று லலிதாவுக்கென்று ஒரு புடவை வாங்கி வந்தேன். அந்தப் புடவையைக் கண்டதும் எரிகிற தீயில் எண்ணெயை விட்டது போன்று இருந்தது, சாசுவுக்கு! — ஆனால் அந்தக் கோபத்தை அவள் நல்ல வேளையாக என் மீதோ, லலிதாவின் மீதோ காட்டவில்லை. தட்டு முட்டுச் சாமான்கள், மேஜை நாற்காலிகள், துணிமணிகள் முதலியவற்றின் மீது காட்டிக் கொண்டிருந்தாள்.

எப்படியோ, இராப் பொழுது பிழைத்துக் கிடந்தால் போதும் என்று நான் தவித்துக் கொண்டிருந்தேன். மறுநாள் பொழுது விடிந்ததும் லலிதாவை ஊருக்கு அனுப்பி வைக்கும் காரியத்தில் முழுமூச்சுடன் ஈடுபட்டேன். எல்லா ஏற்பாடுகளும் ஒருவாறு முடிந்தன. 'டாக்ஸி' வரவேண்டியதுதான் பாக்கி; அடுத்த நிமிஷம் அதுவும் வந்து சேர்ந்தது.

"லலிதா, லலிதா!"

"ஏன், அண்ணா!"

"வண்டி வந்துவிட்டது; வந்து ஏறிக் கொள்!" என்று சொல்லிவிட்டு உள்ளே போனேன். பீரோவைத் திறந்து லலிதாவுக்கென்று வாங்கி வைத்திருந்த புடவையை எடுத்தேன். சாசு ஓடோடியும் வந்து அதை 'வெடுக்'கென்று பிடுங்கிக் கொண்டு, "அவளுக்கென்று ஒரு வண்டி வந்த பிறகும்கூட நீங்கள் புடவை எடுத்துக்

கொடுக்க வேண்டுமா?—அதுவும் சுளையாக நூறு ரூபாயில்!" என்றான் ஆத்திரத்துடன்.

அதே சமயத்தில், "வரவில்லையா, அண்ணா!" என்று கேட்டுக் கொண்டே லலிதா அங்கே வந்து விட்டாள்.

என்னுடைய நிலைமை தர்மசங்கடமாகப் போய் விட்டது. "இதோ வந்து விட்டேன்!" என்று கூறிக் கொண்டே, "சரசு, சரசு!" என்று கெஞ்சு கெஞ்சு என்று கெஞ்சி, அவள் கையிலிருந்த புடவையை எப்படியோ வாங்கிக்கொண்டு வந்து லலிதாவுடன் காரில் ஏறிக்கொண்டேன்.

என் மனம் இன்னதென்று விவரிக்க முடியாத வேதனையில் ஆழ்ந்தது. லலிதாவும் அதே நிலையில்தான் இருந்தாள் என்பது அவளுடைய முகபாவத்திலிருந்து தெரிந்தது.

✶

'கூருக்!' என்று ரயில் கூவியதும் "போய் வருகிறாயா, லலிதா?" என்று அவளிடம் விடை பெற்றுக் கொண்டு திரும்பினேன்.

"இந்தப் புடவையையும் எடுத்துக் கொண்டு போங்கள், அண்ணா!" என்றாள் லலிதா.

எனக்குத் தூக்கிவாரிப் போட்டது. "ஏன் அம்மா, ஏன்?" என்று பதட்டத்துடன் கேட்டேன்.

"நான் போன பிறகாவது நீங்கள் சந்தோஷமாயிருக்க வேண்டாமா?"

"அதெல்லாம் ஒன்றுமில்லை; நீ எடுத்துக்கொண்டு போ! எப்பொழுதுமேதான் நான் சந்தோஷமாக இருப்பதில்லை!"

"இருந்தாலும் என்னால் நீங்கள் இரண்டு நாட்களாக அமைதியை இழந்து தவித்தது போதும், அண்ணா! இனிமேலும் அப்படித் தவிக்க வேண்டாம். எடுத்துக் கொண்டு போங்கள்!" என்று சொல்லிக் கொண்டே, அவள் கண்ணீரும் கம்பலையுமாகப் புடவையை எடுத்து என் கையில் திணித்து விட்டாள்.

"லலிதா, லலிதா!" என்றேன் நான். அதற்குள் ரயிலும் போயே போய் விட்டது. வேறு வழியில்லாமல் வீடு திரும்பினேன்.

வந்ததும் வராததுமாகச் சரசுவைக் கூப்பிட்டு, "இந்தா, இந்தப் புடவையை நீயே எடுத்து வைத்துக் கொள்! 'நான் போன பிறகாவது நீங்கள் சந்தோஷமாயிருங்கள்' என்று சொல்லி, அவள் உனக்கே இதைக் கொடுத்து விட்டுப் போய்விட்டாள்!" என்று நான் புடவையை வீசி எறிந்தேன். அவள் பிரமித்து நின்று விட்டாள். நீர் சுரந்த கண்களுடன் அவளை ஒரு முறை ஏற இறங்கப் பார்த்தேன். என்ன விந்தை இது, அவள் கண்களிலும் ஏனோ நீர் சுரந்தது!—நான் பேசாமல் என் அறைக்குப்போய்ப் படுத்துக்கொண்டேன்.

மத்தியானம் ராஜு வந்து என்னைச் சாப்பிடக் கூப்பிட்டான். "வேண்டாம், போடா!" என்று சொல்லிவிட்டேன்.

அன்று மாலை, "என் மனம் ஒன்றும் சரியாயில்லை. நான் ராஜுவை அழைத்துக்கொண்டு ஊருக்குப் போய் நாலைந்து நாட்கள் இருந்து விட்டு வருகிறேன்!" என்றாள் சரசு.

"எங்கேயாவது தொலைந்து போங்கள்!" என்றேன், படுக்கையில் கிடந்தபடியே.

"உனக்கு மனம் என்றுகூட ஒன்று இருக்கிறதா?" என்று சரசுவைப் பற்றி எண்ணியது என் மனம்.

"எனக்கும் மனம் என்று ஒன்று இருக்கத்தான் இருக்கிறது!" என்று நாலைந்து நாட்களுக்குப் பிறகு ஊரிலிருந்து திரும்பி வந்த அவள் நிரூபித்து விட்டாள்!

வரும்போது அவளும் ராஜுவும் மட்டும் வரவில்லை; அவர்களுடன் லலிதாவும் சேர்ந்து வந்தாள்!

லலிதா சும்மா வரவில்லை; முன்னால் நிராகரித்து விட்டுச் சென்ற புதுப் புடவையைக் கட்டிக் கொண்டு வந்தாள்!

எனக்கு அப்போதுதான் தெரிந்தது: சரசு தன் பிறந்த வீட்டுக்குப் போகவில்லை, லலிதாவின் வீட்டுக்குத்தான் போயிருந்தாள் என்று!

"உங்கள் மனதுக்கு எந்த விதத்திலும் வேதனை தருவதற்காக நான் இந்த வீட்டில் கால் எடுத்து வைக்கவில்லை என்பதை இன்றுதான் உணர்ந்தேன். என்னை மன்னியுங்கள்!" என்றாள் சரசு.

"அடிக்கும் கைதான் அணைக்கவும் செய்யும், அண்ணா!" என்றாள் லலிதா.

"அது 'அன்னையின் கை' என்றுதான் இதுவரை எண்ணியிருந்தேன்; ஆனால், யாருமே நடக்கிறபடி நடந்து கொண்டால் மன்னியின் கையை மட்டுமல்ல, மற்றவர்களின் கைகளையும் அவ்வாறு மாற்றி விடக்கூடும் என்பதை இன்றுதான் கண்டேன்!" என்றேன் நான்.






# யார் திருடன்?

புஷ்பராகம்

காட்டிலே எங்கும் ஒரே பேச்சு. வரவரக் காட்டில் திருடர் பயம் அதிகரித்து விட்டது. ஒட்டைச் சிவிங்கியின் மனைவி தன் பட்டைக் கொலுசைக் காணவில்லை என்று அழுதது; யானையாரின் கடைசிப் பெண் கஜமுகி காதுச் சிமிக்கியைக் காணவில்லை என்று காடெங்கும் திரிந்தது.

"சரி சரி, இனிமேல் பேசாமலிருந்தால் நாமெல்லாம் வேறு காட்டுக்குப் போய்விட வேண்டியதுதான்!" என்று எல்லா மிருகங்களும் கூடிப் பேசின.

"போலீஸுக்குப் போய் 'ரிபோர்ட்' செய்தால் என்ன? என் அண்ணுகூட ஒரு கான்ஸ்டபிளா யிருக்கிறனே!" என்று பெருமை யடித்துக் கொண்டது ஒரு நரி.

"பழைய இன்ஸ்பெக்டர் கழுதைப் புலி லீவிலே போயிருக்காப்போலே இருக்கே! இப்போ புதுசா யார் வந்திருக்கா?" என்று கேட்டது வரிக் குதிரை.

"இதுகூடத் தெரியாமல் நீ ஏன் காட்டில் இருக்கணுமாம்?" என்று அங்கலாய்த்தது நரி.



"நமக்குள்ளே இப்படிச் சண்டை போட்டுக் கொள்வதினுல்தான் நடு வாந்தரத்திலே எவனுவது வந்து அகப்பட்டது லாபம்னு கொண்டு போய் விடுகிறுன்!" என்றது ஒட்டகம்.

"சபாஷ், அப்படிச் சொல்லு!" என்று ஆரவாரித்தன யாவும்.

மறு நாள் காட்டு மிருகங்கள் எல்லாம் ஒன்று சேர்ந்து போலீஸ் ஸ்டேஷனை அடைந்தன. "நில்! சங்கதி என்ன?" என்று கேட்டது கான்ஸ்டபிள் குதிரை.

"இன்ஸ்பெக்டர் கரடியார் இருக்கிறரா, மாமா?" என்று ஒரு அடி முன்னுல் வந்து கேட்டது நரி.

"ஹி...ஹி......ஹி...... இருக்கிறுர், தம்பி! சந்தியாவந்தனம் பண்ணிக் கொண்டிருக்கிறுர்!" என்றது கான்ஸ்டபிள் குதிரை.

உண்மையில் கரடியார் சந்தியா வந்தனமும் பண்ணவில்லை, ஒன்று மில்லை. சாவகாசமாய்ச் சுருட்டுக் குடித்துக் கொண்டிருந்தார்!

"சந்தியாவந்தனத்திலே சாம்பிராணிப் புகை ரொம்ப ஜாஸ்தி போலிருக்கு!" என்று கசமசவென்று பேசிக்கொண்டன, இரண்டு போக்கிரி முயல்கள்.

சிறிது நேரத்துக்குப் பிறகு, "சரி, பேட்டிக்கு வரலாம்!" என்றது கான்ஸ்டபிள் குதிரை.

கரடியார் கால்மேல் கால் போட்டுக் கொண்டு, தமது மயிர் அடர்ந்த கன்னங்களைத் தடவிக் கொண்டிருந்தார்.

"காட்டிலே திருட்டு அதிகமாயிருக்கு!" என்றது ஒட்டகம்.

"யாராவது திருடனைக் கண்ணுல் பார்த்திர்களா?"



"ஜன்னல் வழியே ஓடும்பொழுது நான் பார்த்தேன்!" என்றது ஒட்டைச் சிவிங்கி.

"ஹூம்......யார் அந்தத் திருட்டுப் பயல்?"

"நாமக்காரக் குரங்கு!"

"நாமக்காரக் குரங்கு! ... பூ! போயும் போயும் குரங்கைப் பிடிக்கவா போலீஸ்? ... அடேய், 304!" என்றார் கரடியார்.

"304" ஓடோடியும் வந்து ஒரு 'ஸல்யூட்' அடித்துவிட்டுக் கை கட்டி நின்றது.

"காட்டில் அந்த நாமக்காரக் குரங்கு எங்கே யிருந்தாலும் நாளைக்குள் பிடித்து வா!—உஷார்! நாலு பக்கமும் கான்ஸ்டபிள்களைத் துரத்து!" என்றார் கரடியார்.

"உத்தரவு" என்று விடை பெற்றுக் கொண்டது கான்ஸ்டபிள் '304.'

போலீஸ் ஸ்டேஷனில் நடந்ததை யெல்லாம் மரத்தின் மேலிருந்தபடி பார்த்துக் கொண்டே யிருந்த நாமக்காரக் குரங்கு, "பேஷாய்த் தேடுங்கள்! உங்களால் என்னைக் கண்டு பிடித்துவிட முடியுமா?" என்று தனக்குள் கூறிக் கொண்டது.

ஆனால் மறுநாளே, "திருடன் பிடிபட்டு விட்டான்! திருடன் பிடிபட்டு விட்டான்!" என்ற செய்தி காடெங்கும் அல்லோல கல்லோலப் பட்டது.

"எங்கள் அண்ணு கான்ஸ்டபிளா யிருக்கிற இடத்திலே திருடன் பிடிபடாம லிருப்பானு?" என்று பீற்றிக் கொண்டது நரி.

"எங்கள் வீட்டு வாசல் பக்கமாகத்தான் இன்றைக்குத் திருடனைப் பிடித்துக்கொண்டு போனுர்கள்!" என்றது முள்ளம் பன்றி.



"உங்கள் வீட்டுப் பக்கமா? எங்கள் வீட்டுப் பக்கமாகத்தான்!" என்றது ஒரு ஓநாய்.

இவ்வாறு பேசிக் கொண்டே எல்லா மிருகங்களும் மறுபடியும் போலீஸ் ஸ்டேஷனை அடைந்தன. உள்ளே யிருந்து ஓர் ஆயிரம் குரங்குகள் வெளியே வந்து கொண்டிருந்தன. என்ன ஆச்சரியம்! எல்லாவற்றின் நெற்றியிலும் நாமம்!

"திருடனைப் பிடிக்க வில்லையா?" என்று கான்ஸ்டபிளைக் கேட்டது நரி.

"என்னத்தைச் சொல்லறது, போ! இந்த நாமக்காரக் குரங்குகள் நம்ம போலீஸ் இலாகாவுக்கே நாமத்தைக் குழைத்துப் போட்டு விட்டன!" என்று அங்கலாய்த்தது கான்ஸ்டபிள் குதிரை.

"என்ன? என்ன?" என்றன மற்ற மிருகங்கள்.

"நாமக்காரக் குரங்கைப் பிடித்து வர நாலு பக்கமும் கான்ஸ்டபிள்கள் போனுர்களல்லவா? ஆளுக்கொரு நாமம் போட்ட குரங்கைப் பிடித்துக் கொண்டு வந்தார்கள்! அவைகளுக்குள் 'யார் திருடன்?' என்று கண்டு பிடிப்பது எப்படி?"

"சரிதான்! உங்களுக்குத் திருடனைக் கண்டு பிடிக்க யோக்கியதை யில்லை!" என்றன எல்லா மிருகங்களும்.

பாவம், அந்த நாமக்காரத் திருட்டுக் குரங்கு அன்று இரவுக் இரவே தூங்கிக் கொண்டிருந்த குரங்குகளுக் கெல்லாம் நாமம் போட்டு விட்டு வந்த வைபவத்தை அவை அறியுமா,என்ன?

# படித்துப் பார்!

## பொன்னி

[ஆசிரியர்: முருகு சுப்பிரமணியன்; வருஷச் சந்தா: ரூ. 6; தனிப் பிரதி அணா 8: விலாசம்: பொன்னி அலுவலகம், கீழராஜ வீதி, புதுக்கோட்டை.]

தமிழ்ப் பாஷையிலே என்னென்ன அருமையான பெயர்கள் எல்லாம் இருக்கின்றன என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டுமானால், புதிதாக ஆரம்பமாகும் தமிழ்ப் பத்திரிகைகளின் பெயர்களைப் பார்த்துத்தான் தெரிந்து கொள்ள வேண்டும். 'பொன்னி' என்ற அருமையான பெயரைத் தாங்கிக் கொண்டு வந்திருக்கும் இந்தப் பத்திரிகை பெயரளவில் மாத்திரம் அல்லாமல், உருவத்திலும் விஷயத்திலும் 'பொன்னி'யாகவே விளங்குகிறது. முதல் இரண்டு இதழ்களிலே ஸ்ரீ சோமசுந்தர பாரதியார், பாரதிதாசன், சுவாமி சுத்தானந்த பாரதியார், ம. பெ. பெரியசாமி, ஸ்ரீ முருகு சுப்பிரமணியம் முதலியோர் கதைகளும் கட்டுரைகளும் கவிதைகளும் எழுதியிருக்கிறார்கள். தமிழ் உலகம் 'பொன்னி'க்குச் சிறந்த வரவேற்பு அளிக்குமென்று எதிர்பார்க்கிறோம்.

## பொழுது புலர்ந்தது

[ஆசிரியர்: பெ. திருகூடசுந்தரம், பிரசுரம்: புத்தக நிலையம், ராயவரம், புதுக்கோட்டை ஸ்டேட்; கிடைக்குமிடம்: தமிழ்ப்பண்ணை, தியாகராஜ நகர்; விலை ரூ. 4-0-0.]

தினந்தோறும் பொழுது புலர்ந்தான் புலருகிறது; சூரியன் கிழக்குத் திக்கிலே உதிக்கத்தான் உதிக்கிறான். ஆனால், நூற்றைம்பது வருஷத்துக்குப் பின்னால் பாரத தேசத்தின் அரசியல் வாழ்க்கையிலே இன்று புலர்ந்திருக்கும் பொழுது சாமானியமானதா? அல்லது, இப்போது கீழ்த் திசையிலே தோன்றியிருக்கும் சூரியன்தான் சாமானியமானதா? அது சுதந்திர சூரியன் அல்லவா?

பாரத தேசத்துக்கு முதன் முதலாக மேற்படி சுதந்திரப் பொழுது புலர்ந்திருப்பதைத்தான் ஆசிரியர் பெ. திருகூடசுந்தரம் பிள்ளை இந்தப் புத்தகத்திலே எழுதியிருக்கிறார். மேற்படி சுதந்திரப் பொழுது புலருவதற்காகவும் பிரிட்டிஷ்காரர்கள் இந்த நாட்டைவிட்டுப் போகும்படி செய்வதற்காகவும் இந்தியா செய்த அரும் பெரும் காரியங்களை முக்கியமாக, இரண்டாவது உலகமகா யுத்தம் ஆரம்பமானதிலிருந்து இடைக்கால சர்க்கார் பதவியேற்றதுவரை நடந்த இந்திய சுதந்திரப் போர் நிகழ்ச்சிகளை ஒன்றுகூட விடாமல் வெகு சுவாரஸ்யமாக எழுதியிருக்கிறார். புத்தகத்தை ஒரு முறை புரட்டிப் பார்த்தால், நமக்கே ஆச்சரியமாக இருக்கிறது. அடேயப்பா, இந்த எட்டு ஒன்பது வருஷ காலத்துக்குள் இத்தனை முக்கிய சம்பவங்கள் எல்லாம் நிகழ்ந்திருக்கின்றனவா என்று வியப்பு உண்டாகிறது!

ஆசிரியர் தம்முடைய அருமையான தமிழ் நடையின் மூலம், சிக்கலான பெரிய பெரிய விஷயங்களையெல்லாம் வெகு தெளிவாகவும் பளிச் பளிச் சென்றும் விளக்கியிருக்கிறார். இடையிடையே பல முக்கிய அறிஞர்களின் மேற்கோள்களை யெல்லாம் எடுத்துக் காட்டியிருக்கிறார். அதில் காந்திஜியைப் பற்றிய ஒரு மேற்கோள் ரசமாக இருக்கிறது.

"இந்தியாவில் 170 பிரதான பாஷைகளும் 544 கிளைமொழிகளும் உண்டு என்பது உண்மைதான். ஆனால், இந்தியா முழுவதற்கும் காந்தி என்ற ஒரே ஒரு குரல்தான் உண்டு' என்று ஒரு அமெரிக்க அறிஞர் சொல்லுகிறாராம். இம்மாதிரி இன்னும் எத்தனையோ ரசமான விஷயங்கள் இருக்கின்றன. ஆசிரியர் திருகூடசுந்தரம் இந்தப் புத்தகத்தின் மூலம் தமிழ் அரசியல் உலகத்துக்கும் பெருந் தொண்டு செய்திருக்கிறார். இந்தியாவுக்கு மாத்திரம் அல்ல,—தமிழ் இலக்கியத்திற்கும் பொழுது புலர்ந்திருக்கிறது என்று தாராளமாகச் சொல்லலாம்.

## சீன மக்களும் சீனமும்

[ஆசிரியர்: லின் யூ டாங்; மொழி பெயர்த்தவர்கள்: சுப. நாராயணன், வெ. ராமசாமி; பிரசுரம்: புதுமைப் பதிப்பகம், காரைக்குடி. விலை: ரூ. 7—8—0.]

'சீனா' என்றதும் தற்போது அந்தப் பரந்த பூமியில் சீன சர்க்காரும் கம்யூனிஸ்ட்காரர்களும் ஒருவர் கழுத்தை ஒருவர் பிடித்துக் கொண்டு நிற்பதுதான் பொதுவாக எல்லோருக்கும் ஞாபகம் வரும். அதைத் தவிர சீனாவைப் பற்றியோ அதன் பண்டைய கலைப் பண்பைப் பற்றியோ அறிந்தவர்கள் வெகு குறைவு. இதற்குக் காரணம் என்ன வென்பதைப் பற்றி இந்த நூலாசிரியர் சொல்லுகையில், "மகத்தான விஷயங்களை யாரும் சரியாகப் புரிந்து கொள்வதில்லை. சீனாவுக்கும் அத்தகைய கதி நேர்ந்திருக்கிறது" என்கிறார். இது ரொம்பவும் உண்மையான விஷயம். கண்டு பிடிக்க முடியாத அளவு பெருமையும் மகத்துவமும் வாய்ந்தது சீனா என்பதில் சந்தேகமே இல்லை.

லின் யூ டாங் என்ற இந்த நூலின் ஆசிரியர் சீன ஆசிரியர்களுக்குள்ளே மிகவும் பிரபலமானவர். அவர் எழுதிய புத்தகங்களுக்குள்ளே மிகவும் பிரபலமானதும் இதுவேயாகும். புராதன சீனத்திலிருந்து இன்றைய சீனம் வரை சீனக் கலை, நாடகம், மதம், கல்வி முதலிய எல்லா விஷயங்களையும் தெளிவாக எழுதியிருக்கிறார். ஆயிரக் கணக்கான வருஷங்களுக்கு முன்பே உலகமெங்கும் புகழ் பெற்று விளங்கிய சீனம், அன்னியரின் சூழ்ச்சியாலும் மிருக பலத்தினாலும் எப்படிச் சீர்குலைந்தது என்பதை ஆசிரியர் வெகு சோகத்துடனும் நையாண்டியுடனும் சொல்லும்போது நம் கண்ணிலே நீர் ததும்புகிறது; சிரிப்பும் உண்டாகிறது.

கூடிய விரைவில் ஆசியாவின் மகோந்நத காலம் வரப்போகிறதென்று உலகில் பெரும்பாலோர் இப்போது நம்புகிறார்கள். அப்படி மகோந்நத மடையும் ஆசியாவில் இந்தியாதான் முதன்மை வகிக்கும் என்று நாம் நம்புகிறோம். "இல்லை; சீனாதான் முதன்மை வகிக்கும்" என்று சீனர்கள் சொல்கிறார்கள். இப்படி நம் இந்தியாவுடன் போட்டி போட முனைந்திருக்கும் சீன நாட்டைப் பற்றி நாம் விவரமாகத் தெரிந்து கொள்ளுதல் அவசியமல்லவா? எனவே, தக்க சமயத்தில் இந்த நூல் வெளியாகியிருக்கிறது என்று சொல்லலாம். மொழி பெயர்ப்பு எளிய நடையிலே ரொம்பத் தெளிவாக அமைந்திருக்கிறது.

# மாப்பிள்ளை வரவேற்பு

ஸோமாஸ்

"கடைசியில் ஒரு மூன்று ரூபாய்த் தகராறில் முடியாமல் போய்விட்டது!"

"உங்களுக்கும் வேண்டாம், அவர்களுக்கும் வேண்டாம் என்று இருநூற்று ஐம்பது ரூபாய்க்குப் பேசிப் பார்க்கிறதுதானே!"

"கொஞ்சம் பேரம் பண்ணிப் பார்க்கலாம் என்று ஆசை. நல்ல இடமோ இல்லையோ?"

உடனே, அவர்களுக்கு எதிரில் உட்கார்ந்திருந்த சுந்தரேசன், "என்ன, ஸார்! அவ்வளவு நல்ல இடமா? தெற்குப் பார்த்ததாக்கும்! சைதாப்பேட்டைக்குப் பக்கத்திலேயா, நுங்கம்பாக்கத்துக்குப் பக்கத்திலேயா?" என்றான்,

"இல்லை, ஸார்! என் பெண்ணுக்கு வரன் பார்த்த இடத்தைப் பற்றிப் பேசிக்கொண்டிருக்கோம்!" என்றார் அந்தப் பேர்வழி.

"மன்னிக்கணும்! ரூபாய் தகராறு, பேரம், இடம் என்ற வார்த்தைகள் அடிபடவே, வீடாக்கும் என்று நினைத்துவிட்டேன்!" என்று சொல்லிக் கொண்டே சுந்தரேசன் இறங்கவேண்டிய இடம் வந்துவிட்டதால் இறங்கினான். அவனுடன் அந்தப் பேர்வழியும் இறங்கி அவனைப் பின் தொடர்ந்தார்.

ஆமாம், இவ்வளவும் பஸ்ஸில்தான் நடந்தது!

"ஸார், நான் நிச்சயம் பண்ணிவிடலாம் என்று நம்பியிருந்த இடத்தில், ஒரு மூன்று ரூபாய்க்கு ஆசைப் பட்டுப் பிள்ளையின் தகப்பன் வேறு இடத்தில் முடித்துக் கொண்டு விட்டான். எப்படியாவது இந்த வருஷமே கல்யாணத்தை முடித்துவிட வேண்டும் என்று பார்க்கிறேன்!" என்றார் சுந்தரேசனுடன் இறங்கியவர்.

பிறகு சற்று நிதானித்து விட்டு, "உங்களுக்குக் கல்யாணம் ஆகவில்லையே!" என்று இழுத்தார்.

இப்பொழுது சுந்தரேசன் முகத்தில் அசடு மட்டும் வழியவில்லை; ஆத்திரமும் பொங்கி வழிந்தது.

"எனக்குக் கல்யாணம் செய்து கொள்ளும் உத்தேசமே கிடையாது. நான் பி. ஏ. பாஸ் செய்து விட்டேன். விஞ்ஞான ஆராய்ச்சியில் இறங்கித் தீவிரமாக வேலை செய்ய வேண்டும் என்பது என் விருப்பம். பெங்களூரில் என் மாமாவிடம் இருக்கும் தாயாரை இங்கு அழைத்து வந்து குடித்தனம் வைக்கலாம் என்று பார்க்கிறேன். வீடு கிடைக்கவில்லை. கல்யாணப் பேச்சே எனக்குப் பிடிக்கிறதில்லை. அதுவும் பெண்ணைப் பெற்றவர்களுக்கே கொஞ்சங்கூட......!" என்று மேலே வாக்கியத்தை முடிக்காமல் நிறுத்தினான்.

"ஸார், கோபித்துக் கொள்ளாதீர்கள்! ஏதோ பெண்ணைப் பெற்ற தோஷம் கேட்டேன்!—அது இருக்கட்டும்; நீங்கள் எனக்கு ஒரு உபகாரம் பண்ண முடியுமா?" என்று அவர் ரொம்பவும் கெஞ்சிய குரலில் கேட்டார்.

சுந்தரேசன் மனம் இளகிவிட்டது. "என்ன, சொல்லுங்கள்?" என்றான்.

"இங்கே வல்லப அக்ரகாரத்தில் பி. ஏ. பாஸ் செய்த பையன் ஒருவன் இருக்கிறானாம். தாங்கள் தயவு செய்து அந்தப் பையனைப் பார்த்து, ஜாதகத்தையும் வாங்கி வைத்தால் நான் அடுத்த வாரம் வந்து வாங்கிக் கொள்கிறேன்" என்றார்.

"ஆகா, இதென்ன பிரமாதம்! பேஷாய் விசாரித்து வைக்கிறேன்!" என்றான் சுந்தரேசன்.

★

அவர் பெயர் ராஜம் ஐயர். அவருக்கு அக்கௌண்டண்டு ஜெனரல் ஆபீஸில் வேலை. இரண்டு பெண்கள் விவாகத்துக்கு இருந்தனர். மூத்த பெண்ணுக்குத்தான் ராஜம் ஐயர் வரன் பார்த்துக் கொண்டிருந்தார். தம் பெண்ணைத் தொட்டுத் தாலிகட்டும் மகானுபாவனுக்கு அவர் மூவாயிரம் ரூபாய் வரை வரதக்ஷிணை கொடுக்கத் தயாராயிருந்தார். பையன் எப்படியிருக்க வேண்டும் என்பதற்கும் அவர் ஒரு ஷரத்து தயார் செய்து வைத்திருந்தார்.

பையன் பி. ஏ. தேறியவனாயும் குறைந்தது நூறு ரூபாய் சம்பளத்தில் உத்தியோகம் பார்ப்பவனாயும் இருக்கவேண்டும்—அல்லது, பி.ஏ. தேறியவனாயும் ஐந்து வேலி நில முள்ளவனாயும் இருக்கவேண்டும்—

அதுவும் இல்லாவிட்டால் பி. ஏ. தேறிவிட்டாலும் ரூ. 20,000க்குக் குறையாமல் பாக்கியில் ரொக்க முள்ளவனா யிருக்க வேண்டும்.

இந்த ஷரத்துப்படி சரியான பையன் கொஞ்சம் சுமாராயிருந்து ஜாதகமும் பொருந்தி யிருந்தால் இந்த வருஷமே விவாகம் நடத்திவிட அவர் தயார்தான். அதற்காக அவர் கல்யாணத்துக்கு வேண்டிய ஏற்பாடுகளெல்லாம்கூட பலமாகச் செய்திருந்தார். 'இன்னார் குமாரனுக்கு' என்னும் விவரம் தவிர பாக்கி விவரங்களெல்லாம் 'கம்போஸ்' செய்து வைக்கும்படி தமக்குத் தெரிந்த அச்சாபீஸில் ஏற்பாடு செய்திருந்தார். அத்துடன் அவர் நிற்கவில்லை; வரன் விஷயமாகத் தம் மாமனாரை நாகப்பட்டணத்துக்கும் மைத்துனனை பெங்களூருக்கும் அனுப்பியிருந்தார். அவர்களிடம் வரதக்ஷிணைக்காகக் கையெழுத்திட்ட 'செக்'கும் கொடுத்திருந்தார். வாழை மரங்களைக் கூடப் பாதி வெட்டச் சொல்லியிருந்தார் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்!

★

சுந்தரேசன் வல்லப அக்ரகாரத்துக்குச் சென்று அந்தப் பையன் வீட்டைத் தேடினான். வீட்டு நம்பர் மறந்து போய்விட்டது. வேறு விவரங்களும் தெரியவில்லை. "படித்த விவாக மாகாத பையன்கள் இந்தத் தெருவில் இருந்தால் வெளியே வரலாம்!" என்று தமுக்கு போடச் சொன்னால் என்ன என்று கூடத் தோன்றியது அவனுக்கு.

கடைசியில் அந்தத் தெருவில பத்துப் பன்னிரண்டு நடவைக்கு மேல் இங்குமங்கும் 'பாரா' போட்டுவிட்டு, ஒரு வீட்டுத் திண்ணையில் உட்கார்ந்தான்.

அங்கே ஒரு பையன் 'ஈஸி சேரி'ல் சாய்ந்து கொண்டு ஏதோ ஒரு புத்தகத்தை வைத்துக் கொண்டு படித்துக் கொண்டிருந்தான். சுந்தரேசன் அவனை யணுகி அவன் கையிலிருக்கும் புத்தகத்தைப் பார்த்தான். அவன் சந்தேகம் பளிச்சென்று நீங்கியது.

"ஷேக்ஸ்பியர் நாடகங்களை எழுதியது ஷேக்ஸ்பியர்தானா?" என்ற புத்தகம் அது. உலக விஷயங்களில் சிரத்தை யின்றி இப்படி வறட்டு ஆராய்ச்சியில் ஈடுபட்டிருப்பவன் பி. ஏ. படிப்பவனாய்த்தானே இருக்க முடியும்? — சுந்தரேசன் அந்தப் பையனின் தகப்பனாரிடம் பேச்சு வார்த்தை நடத்தியதில் பத்து நிமிஷத்தில் கல்யாணப் பேச்சு முடிந்து விட்டது.

இரண்டு நாட்களுக்குப் பிறகு ராஜம் ஐயர் தயாரமே உருவாய், சுந்த



ரேசன் வீட்டுக்கு வந்துசேர்ந்தார். சந்திரேசன் தான் பார்த்த வரனைப் பற்றிச் சொன்னதும் ராஜம் ஐயர் காகா வென்று அவன் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு அந்தப் பையனின் வீட்டுக்குப் போனார். அந்த வரன் நிச்சயமாயிற்று என்றும் ராஜம் ஐயர் தம்மிடம் தயாராய் வைத்திருந்த 'செக்'கில் ரூபாயை எழுதிக் கொடுத்தா ரென்றும் சொல்ல வேண்டுமா, என்ன?

★

அந்த மாத முதல் முகூர்த்தத்தில் அப்பா சாமிக்கு (அதுதான் ராஜம் ஐயர் பெண்ணுக்கு நிச்சயிக்கப்பட்ட பி. ஏ.) விவாகம் நிச்சயம் ஆயிற்று. முகூர்த்தத்துக்கு முதல் நாள் ஒரு கோயிலில் வைத்து மாப்பிள்ளையை அழைக்க ஏற்பாடு நடந்து கொண்டிருந்தது. திடீரென்று கூட்டத்தில் ஒரு கலவரம்!

"நிறுத்து, கல்யாணத்தை!" என்றார் அத்தான் வெங்கிட்டு.

"என்ன, என்ன?" என்றார் பிள்ளையின் தகப்பனார்.



"என்ன, பாகவதர்வாள்! இப்ப வெல்லாம் உங்களைக் காணவே முடியறது இல்லையே! ஒரு விஷயம்னு. நம்ம வீட்டிலே ஒரு மாதத்துக்கு உங்கள் கதை வைக்கணும்னு இருக்கேன்......!"

"ஓ. பேஷா வைக்கலாமே! ஆனால் உங்கள் வீட்டிலே இடம் போதுமா?"

"அதுக்குத்தான் ஓய். உம்ம கதை வைக்கணும் கிறேன். எங்க வீட்டுக்குப் பக்கத்து வீடு காலி யாக்கன்னு சௌகரியமா யிருக்கும் பாருங்கோ!"

"என்ன ஐயா, பையன் பி. ஏ. பரீட்சையில் இரண்டாவது வகுப்பில்தான் தேறியிருக்கிறானாமே? முதல் வகுப்பில் என்று சொன்னீரே! அதை நம்பியல்லவா ஐந்நூறு ரூபாய் அதிகமாய்க் கொடுத்தேன்!" என்றார் ராஜம் ஐயர் உச்சஸ்தாயியில்.

எல்லோரும் சந்திரேசனைச் சூழ்ந்து கொண்டனர். அவனும் உரக்கப் பேசிச் சமாதானத்தை நிலைநாட்ட முயன்றான்.

இந்தச் சமயம் வாசலில் ஒரு மோட்டார் வண்டி வந்து நின்றது. பெங்களூருக்கு வரன் பார்க்கப் போயிருந்த ராஜம் ஐயரின் மைத்துனர் இன்னும் இரண்டு மூன்று பேர்களோடு காரிலிருந்து இறங்கினார்.

அவர் சந்திரேசனைக் கண்டதும், "என்ன சந்திரேசா, உன்னைத் தேடிக் கொண்டு தான் இங்கே வருகிறேன். உன் மாமாவும் அம்மாவும்கூட வந்திருக்கிறார்களே, பார்த்தாயா!" என்றார்.

இதற்குள் சண்டையும் ஒருவாறு ஓய்ந்து பிள்ளை வீட்டுக்காரர்களும் தங்கள் ஊருக்குக் கிளம்பிவிட்டனர்.

"அத்திம்பேரே! மாப்பிள்ளையைப் பக்கத்தில் வைத்துக் கொண்டே ஊர் முழுவதும் வரனுக்கு அலைந்தீர்களே! சந்திரேசனும் பி. ஏ. பாஸ் செய்திருக்கிறான்; ஜாதகம் பொருந்துகிறது; எனக்கும் நன்றாய்த் தெரிந்த பையன். இவன் கல்யாண விஷயமாய்ப் பிடிவாதமாக இணங்காமலிருந்தபடியால் பெங்களூருக்குப் போய் அவன் மாமாவிடமும் தாயாரிடமும் சொல்லி விஷயத்தை முடித்துக் கொண்டு வந்தேன்!" என்றார் ராஜம் ஐயரின் மைத்துனர்.

அவ்வளவுதான்; அதுவரை நின்றிருந்த நாதஸ்வரம் மீண்டும் ஒலிக்க ஆரம்பித்தது. மாப்பிள்ளை சந்திரேசனை வரவேற்கும் வைபவமும் 'ஜம்'மென்று ஆரம்பமாயிற்று!



## நவகாளிக் காட்சிகள்

ஒரு கிராமத்தில் நடந்த மகாத்மாவின் பிரார்த்தனைக் கூட்டம்.

பிரசாதபுரி வாசிகளுக்கு மகாத்மா பழங்கள் வழங்குவதைப் படத்தில் காணலாம்.

காந்திஜி யாத்திரையின் போது அவருக்கு ஆங்காங்கு கிராமமோ, செலவோ இல்லாமல் தாற்காலிகமாக அமைக்கப்படும் ஸ்நான அறை.







இத்தகைய பாலங்களைக் கடந்து செல்லுவதில் மகாத்மா காந்திக்கு ஓர் அலாதியான சந்தோஷம். ஆம். ஹிந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் உள்ள பிளவை அன்பாற பாலத்தினால் ஒன்று படுத்த இராப்பகலாக அருந் தொண்டாற்றி வரும் காந்திஜிக்கு, இரண்டு ஓரங்களை ஒன்றுபடுத்தும் பாலத்தின் மீது நடந்து செல்லுவதில் சந்தோஷம் ஏற்படுவது இயற்கைதான். கிழக்கு வங்காளத்தில் இத்தகைய பாலங்கள் மிகவும் அதிகம்.

ஒரு முஸ்லிம் வயோதிகருடன் காந்திஜீ பேசிக்கொண்டிருக்கிறார். காந்திஜியின் இடது புறத்தில் நிற்பவர் மேஜர் ஜெனரல் ஷா நவாஸ்.

*சித்ரா:
குறுகுறுவென்ற கருவிழிகள் . . .
மாசற்ற மதிவதனம் . . .

உங்கள் சருமத்திற்கு உங்களால் முடியுமான முக்கிய பராமரிப்பு, அதை செம்மையாகச் சுத்தம் செய்வதே யென்பது நீங்களும் அறிவீர்கள், இல்லையா? . . நறுமணங்கமழும் பாண்ட்ஸின் உதவியால், வதனத்தை சுத்தமாகவும் காந்தி யோங்கவும் வைத்துக் கொள்ளுங்கள்.

## என்னே *அவளது எழில்! அவள் பாண்ட்ஸ் உபயோகிக்கிறாள்!

பாண்ட்ஸ்.




**பாண்ட்ஸ் கோல்ட் க்ரீம்:** தினம் இரண்டு வேளை விரல் நுனிகளால் கோல்ட் க்ரீம் மெதுவாகத் தடவி, முகத்தை செம்மையாகச் சுத்தம் செய்யுங்கள். பாண்ட்ஸ் டிஷ்யூவால் துடைத்துக் களையவும்.




**பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம்:** பின்பு வானிஷிங் க்ரீம் தடவுங்கள். அது சருமத்தினுள் மறைகிறது—சருமத்திற்கு பாதுகாப்பளிக்கிறது.



**பாண்ட்ஸ் பௌடர்:** பின்னர் வேண்டுமானால் கொஞ்சம் பௌடரும் தடவிக் கொள்ளுங்கள். முகம் புஷ்பம்போன்ற மோகன காந்தியுடன் விளங்கும்.

# பாண்ட்ஸ் க்ரீம்ஸ்

வியாபார விவரங்களுக்கு:
எல். டி. ஸெய்மூர் & கோ.
(இந்தியா) லிட்.
பம்பாய்–கல்கத்தா–கராச்சி–சென்னை.



JWT.



திருநெல்வேலி ஸ்ரீ வ. உ. சிதம்பரம் பிள்ளை வாலிபர் சங்கத்தின் சார்பாக 2-3-47ல் ஸ்ரீ வ. உ. சிதம்பரம் பிள்ளை ராட்டைக் கழகத் திறப்பு விழா சிறப்பாக நடந்தேறியது.

# ஈசனே, நீ காக்க வேணும்!

காட்டூர் கண்ணன்

பல்லுப்போன கிழவன்சொல்லும் பலிக்கப்போச்சுது!
பதவிமேலே கொண்டமோகம் அழிஞ்சுபோச்சுது!
கல்லுமண்ணைப் பிசைந்துவைத்துக் காவல்என்றாலும்—அதைக்
கண்டதுமே பயந்துநிக்கும் கௌரதைவேணும்!

நாலுபுறமும் இடிந்தவீட்டை நம்பிநின்னாங்க!
நாரைக்காட்டி மணக்குதுன்னு நம்பச்சொன்னாங்க!
தாறுமாறாய்க் காரியங்கள் செய்துவிட்டாங்க—தங்கள்
தவறைஉணராமல்ரொம்பக் குறையும்பட்டாங்க!

ஏலம்கூறிப் பெர்மிட்டுகள் எங்கும்வித்தாங்க!—அந்த
இழிவைஎண்ணிப் பிறர்நகைக்க இடமும்வைத்தாங்க!
கானத்திலே மானத்தையே காக்கவந்ததுபோல்—நம்ம
காங்கிரஸை மேலோருங்க முடிவுகண்டாங்க!

பொன்னிருந்த இடத்திலொரு பூனைவைத்ததுபோல்—இப்போ
பொறுப்புணர்ந்த மந்திரிங்க வந்திருக்காங்க!
இன்னுமிங்கே ஏறுமாறாய் ஏதும்நேராமல்—நாம்ப
'ஈசனே, நீ காக்கவேணும்!' என்றுவேண்டிப்போம்!

## அழகுக்கு உகந்தது






# ஐடெக்ஸ் கண்மை

எல்லா ஷாப்புகளிலும் கிடைக்கும். விலை அணா 12. அரவிந்த் லாபரேடரீஸ் தயாரிப்பு

விநியோகிப்பவர்கள்: புஷ்பவனம் ஸ்டோர்ஸ் திருவல்லிக்கேணி - மதராஸ்

---

# கலியாண சீஸனுக்காக

உயர்ந்த நேர்த்தியான சரக்குகளையே நாங்கள் விற்பனை செய்கிறோம்



உங்களது மனதிற்கேற்ற நவீன பட்டு ஜவுளி தினுசுகள் ஏராளமாக வந்துள்ளன



இன்றே ஒரு முறை விஜயம் செய்து உங்களுக்குப் பிடித்தமானதை தேர்ந்தெடுத்துக் கொள்ளுங்கள்

## ஆரணி ஸில்க் ஹவுஸ்

4, சன்னதித் தெரு, மயிலாப்பூர்

சென்னை :: போன்: 86349




## "ஆரோக்கியத்திற்கு உட்புற சுத்தமே முதலாவது!"

இன்றியமையாத மலமிளக்கி




வெளிப்புற சுத்தத்தின் முக்கியத்தைப் பற்றி எடுத்துச் சொல்லுவது அனாவசியம். ஏனெனில், இயற்கையிலேயே, நேரான வழியில் அது வழக்கத்தில் வந்துவிட்டது. எப்படியானாலும் உடலின் உட்பாகத்தை சுத்தமாக வைத்திருப்பது அதைவிட மிக முக்கியமானது. அதாவது மலச்சிக்கலுக்குக் காரணமான எல்லாவிதமான மாசுகளையும் அகற்றுதல். தினசரி வயிற்று அவதிகளிலிருந்து விடுதலை பெறுதல். இஷ்டப்படும்போது, ஒரு டம்ளர் நுரையுடன் பொங்கும் ஆண்ட்ரூஸை அருந்த அது சீக்கிரமாக உட்புறத்தைக் கழுவி ஆரோக்கியமான பாதையில் திருப்புகிறது. ஆண்ட்ரூஸ் செய்யும் ஆரோக்கியத்திற்கான வேலைகளைப் படித்துப் பாருங்கள்.

முதலில்: ஆண்ட்ரூஸ் வாயையும் நாக்கையும் சுத்தப்படுத்தி சுசிதமாக்குகிறது.

அடுத்தபடி: ஆண்ட்ரூஸ் வயிற்றை சரிப்படுத்தி புளிப்பு நீரை நிறுத்துகிறது.

பிறகு: ஆண்ட்ரூஸ் ஈரலை நேர்மையாக்கி உப்புசத்தைப் போக்குகிறது.

கடைசியாக: உட்புற சுத்தத்தை செய்து முடிக்க, ஆண்ட்ரூஸ் மெதுவாக வயிற்றை சுத்திகரிக்கிறது. அது அவதிப்படுத்தும் விஷங்களை அப்புறப்படுத்தி, மலச் சிக்கலைப் போக்கி, ரத்தத்தை சுத்தப்படுத்தி குளிர்ச்சியாக்குகிறது.

# ANDREWS

## ஆண்ட்ரூஸ் லிவர் ஸால்ட்

குளிர்ச்சியூட்டுகிறது - களைப்பாற்றுகிறது - ஊக்கமூட்டுகிறது

"டின்களிலும் கார்டன்களிலும் பாக் செய்யப் பட்டு எங்கும் புது ஸ்டாக்குகள் இருக்கின்றன."

106

# தென்னாட்டு அழகிய நங்கை

கொஞ்சம் புஷ்பங்கள் சூட்டி, கூந்தலைச் சொகுசாக சிங்காரித்து தன் சோபையை பன்மடங்கு அதிகமாக்கிக் கொள்ளுகிறாள். பளபள வென்றிருக்கும் அவளுடைய கூந்தல், டாம்கோ கூந்தல் தேங்காயெண்ணெயும் ஷாம்பூவும் அவள் வழக்கமாக உபயோகித்து வருவதன் பயனாகும்.

**டாம்கோ கூந்தல் தேங்கா யெண்ணெயும் ஷாம்பூவும்**




தி டாடா ஆயில் மில்ஸ் கம்பெனி லிமிடெட்

# கம்பர் தரும் காட்சி

**டி.கே.சி.**

## 173. அரக்கரிடையா இருந்து விட்டீர்!

சீதையின் தெய்விகமான அழகைப் பார்த்தவுடன் ராவணனுக்குத் தடுமாற்றம் உண்டாயிற்று என்பதைப் பார்த்தோம்.

ஒருவருக்கொருவர் பரிவுடன் க்ஷேமலாபங்களை விசாரித்தமாதிரி, ஊர் பேர் விசாரிக்க ஆரம்பித்தார்கள். அவ்வளவுதான்; ராவணனுடைய உள்ளத்தில் உண்டான தடுமாற்றம் நீங்கி விட்டது; தைரியமாகவே பேச ஆரம்பித்து விட்டான்:

"சகலகலா வல்லவனாய் இலங்கை வேந்தன் ஒருவன் இருக்கிறான். அடடா, அவனுடைய பெருமைதான் என்ன! புகழ்தான் என்ன! கொடையைப் பற்றிச் சொல்லி முடியாது! தேக இடகாத்திரத்தைப் பார்த்தாலோ சிரஞ்சீவியான வாழ்க்கையை பிரமனே கொடுத்திருக்கிறான் என்று தான் சொல்ல வேண்டும். அவனுடைய வீரச் செயல்கள் சாமானியப் பட்டவையா? — சிவபெருமானுடைய வாளை அல்லவா கையில் ஏந்தி இருக்கிறான்! சிரசில் அணியும் கிரீடத்தின் பிரகாசத்தையும் அழகையும் வர்ணிக்க முடியாது. ஏதோ நவரத்தினங்களைப் பதித்திருக்கிறது என்று சொல்லத் தோன்றாது; நவக்கிரகங்களையும் நக்ஷத்திரங்களையுமே வாரிக் கொட்டியிருப்பது போல்த் தோன்றும்!"

**தானன தானன**
**தான தன்னன**

**'தாளுடை மலருளான்**
**தந்த அந்தமில்**

**நாளுடை வாழ்க்கையன்,**
**நாரி பாகத்தன்**

**வாளுடைத் தடக்கையன்,**
**வாரி வைத்தவெங்**

**கோளுடைச் சிரசினன்,**
**குணத்தின் குன்றனான்.'**

**[தாளுடை மலருளான்: தண்டு தாங்கிய தாமரை மலரிலுள்ள பிரமன்; தந்த அந்தமில் நாளுடை வாழ்க்கையன்: கொடுத்த இறுதியில்லாத வாழ்வை உடையவன்— நீர்க்க ஆயுள் அவனுக்கு; நாரி பாகத்தன்: சிவபெருமானது; வாரி வைத்த வெங்கோள் உடைச் சிரசினன்: மிக்க பிரகாசம் கொண்ட நவக்கிரகங்களையும் நட்சத்திரங்களையும் வாரிக் குவித்து வைத்த மாதிரியுள்ள கிரீடத்தைத் தலையில்ச் சூடியவன்; குணத்தின் குன்று அன்னான்: அபாரமான குணச் சிறப்பு வாய்ந்தவன்; ஈகை, கருணை, நட்பு, பக்தி இவைகளை அளந்து சொல்ல முடியாது.]**

* * *

ராவணன் என்று பெயரைச் சொல்லாமலே, தனக்கு உற்ற நண்பன் அவன் என்று சொல்லிக் கொள்ளுகிறான்.

**ஆண்டையான் அரகவிற்**
**றிருந்த அந்நகர்**

**வேண்டியான் சில்பகல்**
**உறைய வேண்டினேன்,**

**நீண்டனென் இருந்(து), அவற்**
**பிரிந்த நெஞ்சினேன்**

**மீண்டனென்' என்றனன்,**
**வினையம் உன்னுவான்.**

**[ஆண்டையான்: மேலே சொன்ன திவ்ய புருஷன்: அரகவிற்றிருந்த அந்நகர்: அரக செலுத்தும் அந்த நகரத்திலேயே; வேண்டியான் சில்பகல் உறைய வேண்டினேன்: நான்**

**விரும்பித் தங்க வேண்டும் என்று அரசனிடம் தெரிவித்தேன்; நெடு நாள் தங்கும்படி எப்படியோ ஏற்பட்டு விட்டது. அவன் பிரிந்த நெஞ்சினேன்: கடைசியில் அவனை விட்டுப் பிரிய மனமில்லாமல்த்தான்; மீண்டனென்: இங்கே வர நேர்ந்தது: வினையம் உன்னுவான்: சூதடியான எண்ணத்தைக் கொண்டவனுய் — இப்படி யெல்லாம் பேசினுன்.]**

•:•

மேலே சொன்ன விஷயங்களைக் கேட்டதும் சிதைக்குத் திகைப்பு உண்டாய் விட்டது: "அரக்கர்கள், அடடா, பெரிய பாதகர்கள் அல்லவா? வேதத்தை விரோதிக்கிற வர்கள்; வேதங் கற்கிறவர்களையும் விரோதிக்கிறவர்கள்தானே? அறிவோடு கூடிய உயிர்களையே தின்னக் கூடியவர்கள் அல்லவா? அப்படிப் பட்டவர்களுடைய ஊரில் நீர் தங்கு வதற்கு என்ன காரணம், தெரிய வில்லையே! உடம்பே மிகை யென்று எண்ணி விரதங்களைச் சதா அனுஷ்டித்துக் கொண்டிருப்பவர் அல்லவா, நீர்!"

**'வேதமும் வேதியர்**
**அருளும் வெஃகலாச்,**

**சேதன மன்னுயிர்**
**தின்னும் தீவினைப்**

**பாதகர் அரக்கர்தம்**
**பதியின் வைகுதற்(கு)**

**ஏதுஎன்? உடலமும்**
**மிகையென்(று) எண்ணுவீர்!'**

**[வெஃகலா: விரும்பாத. — வெறுக்கும்; சேதன மன்னுயிர் தின்னும்: அறிவு படைத்த உயிர்களையே தின்னும்.]**

•:•

"வனத்தில் வாழும் ரிஷிகள் அருகில் அல்லவா நீர் இருக்க வேண்டும்; தர்மவான்கள் வசிக்கிற நீர்வளமுள்ள நாட்டில்த் தங்குவதை எண்ணுமல், கொள்ளை, கொலை யெல்லாம் செய்கிற இனத்தவரோடு தங்கவும் மனம் வந்ததே! பேஷ், பேஷ்!"

**'வனத்திடை மாதவர்**
**மருங்கு வைகலிர்,**

**புனல்த்திரு நாட்டிடைப்**
**புனிதர் ஊர்புக**

**நினைத்திலிர், அறநெறி**
**நினைக்கி லாதவர்**

**இனத்திடை வைகினிர்!**
**என்செய் தீர்!' என்றுன்.**

**[வனத்திடை மாதவர் மருங்கு வைகலிர்: வனத்தில் வசிக்கிற ரிஷிகள் பக்கத்தில் அல்லவா தாங்கள் தங்க வேண்டும்; அப்படிச் செய்யவில்லையே! புனல்த் திரு நாட்டிடை: நீர்வளம் பொருந்திய வசதியான நாட்டில்; புனிதர் ஊர்புக நினைத்திலிர்: புனிதர்கள் வாழும் ஊரில்த் தங்க உமக்கு விருப்பம் இருக்கிறதாகத் தெரியவில்லை; ஆனுல் அறநெறி நினைக்கிலாதவர் இனத்திடை: தர்ம நெறி ஒன்று உண்டு என்று சிந்திக்கக்கூடச் செய்யாத கூட்டத்தார் இடை; வைகினிர்: தங்கி விட்டீரே; என் செய்தீர்; அடடா, என்ன செய்து விட்டீர்!]**

பொதுவாக நீர்வளம் உள்ள நாட்டில் ஆகாரம் மிகுதியாய் இருக்கும். திருட்டு முதலிய செயல்களுக்கு அவசியம் இராது. நீர்வளம் இல்லாத நாட்டில்த்தான் கொள்ளை, கொலை எல்லாம் நிகழும்.

இலங்கையில் நீர்வளம் நிலவளம் எல்லாம் இருந்தும் அங்கேதான் கொடுமைகள் எல்லாம் தாண்டவ மாடின. இந்த அபூர்வமான, இயற்கைக்கு மாறுன நிலையைச் சிதை கண்டாளா? இல்லை. அதனுல்த்தான் வளமான நாட்டிடை முனிவர்கள் வசிக்கும் புனிதமான ஊருக்குப் போகலாகாதா?—என்கிறுன்.

அரக்கர்களிடையும் போய் இருந்திரே! அடடா, என்ன செய்து விட்டீர்?—என்று சொல்லுவதில் அபூர்வமான ஏமாற்றம், இதிகாச நயம் எல்லாம் கிடக்கிறது!—சிதையே அல்லவா அந்த அரக்கரிடையே தங்கப் போகிறுள்?

'என் செய்திர்?' என்பதில் ஒரு கண்டனம், பரிவு, ஏளனம் எல்லாம் கலந்துள்ள பாவம் இருக்கிறது.

# வெங்காயம்

"சங்கா"



"ஆனந்த பாஷ்பம் என்றால் என்ன?" என்று முன்னொரு சமயம் வெட்டிப் புலவரைக் கேட்டேன். "'ஆனந்த பாஷ்பம்' என்றால் 'களிப்புக் கண்ணீர்'" என்று தூய தனித் தமிழில் மொழி பெயர்த்துச் சொன்னார் அவர். அப்படி மொழிபெயர்த்துச் சொல்லியும் எனக்குப் புரியவில்லை என்பதைக் கண்டு, தமது இல்லக் கிழத்தி இலக்குமியைக் கூப்பிட்டு, ஒரு வெங்காயம் கொண்டு வரும் படி கட்டளை யிட்டார். அதை என்னிடம் நீட்டி, "இதை அரிந்தால் களிப்புக் கண்ணீரை அறியலாம்" என்று சிலேடை போட்டு விளக்கம் செய்தார்.

பண்டிதர்களுக்கே கறிகாய்கள் மீது அபார மோகம். உள்ளங்கை நெல்லிக் கனியை மென்றுகொண்டே இருப்பார்கள். தேமாங்காய், புளிமாங்காய், கருவிளங்காய், கூவிளங்காய் ஆகியவற்றைத் தினம் தினம் துவையல் அரைத்துச் சாப்பிடுவார்கள். வெட்டிப் புலவருக்கோ மற்றெல்லாக் கறிகாய்களையும் விட வெங்காயத்தின் மேல் தான் பிரியம் அதிகம். எந்த விஷயத்தைப் பற்றிப் பேசினாலும் வெங்காயத்தை உபமானமாகவோ உதாரணமாகவோ புகுத்தி விடுவார். "கேளப்பா வெங்காய மகிமை தன்னை, தோளப்பா உன் கையைக் கொட்டி விட்டால்..." என்று ஏதேதோ பாட்டுகள் வேறு பாட ஆரம்பித்துவிடுவார்!

பேச்சிலேயே இத்தனை வெங்காயம் சேர்க்கிறவர், சாப்பாட்டில் எத்தனை சேர்த்துக் கொள்வார் என்பதைச் சொல்லவா வேண்டும்? காலையில் வெங்காய தோசை அல்லது வெங்காய உப்புமா; இட்டிலியென்றால் அதற்கு வெங்காயச் சாம்பார்; மத்தியானம் வெங்காயச் சாம்பார், வெங்காயம் போட்ட உருளைக் கிழங்கு முதலியன. இடைவேளைக்கு வெங்காயப் பஜ்ஜி அல்லது வடை. ராத்திரிச் சாப்பாட்டுக்கு வெங்காயச் சட்னி அல்லது கொத்ஸு. இப்படியாக ஒரே ஆனந்த பாஷ்பம்தான்!

வெட்டிப் புலவருக்கு இவ்வளவு தூரம் வெங்காயப் பைத்தியம் பிடித்திருக்கக் காரணம் என்ன என்று ஆராய ஆரம்பித்தேன். அது என்னை மனோதத்துவ ஆராய்ச்சிக்கே கொண்டுபோய் விட்டது.

வெட்டிப் புலவரின் பாட்டனார் பெரிய வெங்காய வியாபாரியாக இருந்தார். முதலில் திண்ணையில் உட்கார்ந்து வெங்காயத்தைக் கூறு கட்டி விற்றார். பிறகு கடையில் உட்கார்ந்து வீசைக் கணக்கில் விற்றார். அப்புறம் வண்டி வண்டியாய் ஏற்றியும் கப்பல் கப்பலாய் ஏற்றியும் வியாபாரம் செய்தார். அவருடைய திருக்குமாரன், அதாவது வெட்டிப் புலவரின் தகப்பனார் சிறு பிள்ளையாக இருந்த போது, தெருப் பிள்ளைகள் எல்லாம் "வெங்காய வடை" என்றே அவரைக் கூப்பிட்டார்கள். அதே பெயர் தெருவிலிருந்து ஊருக்கும், ஊரிலிருந்து வெளியூர்களுக்கும் வெங்காய மணம் போலப் பரவிற்று. வெங்காய வியாபாரியின் மகனுக்கு வெட்கம் தாங்க முடியவில்லை. வெட்கத்தோடு வெங்காயத்தின்மேல் வெறுப்பும் வளர்ந்தது. "இந்த வெங்காய வீட்டில், இந்த வெங்காயத் தகப்பனுக்குப் பிள்ளையாய்ப் பிறந்தேனே!" என்று புலம்பித் தவித்தார். கொஞ்சம் வயது வந்ததும் வெங்காய வியாபாரத்தை நிறுத்திக் கொள்

னும்படி தகப்பனாரிடம் சொல்லிப் பார்த்தார். "வெங்காயம் விற்று காசு சேருமா?" என்று கேட்டார் பெரியவர். "காசு சேருமோ சேராதோ, என் பெயர் சேருகிறது!" என்று துக்கத்துடன் கூறினார் சிறியவர். "நான் உயிரோடு இருக்கும் வரை வெங்காயத்தை விடமாட்டேன். நான் கண்ணை மூடிய பிறகு வேண்டுமானால் நீ கடையைக் கட்டலாம்" என்று 'ஆனியன்' வியாபாரி காரமாகப் பதில் கொடுத்தார்.

கொஞ்ச நாள் சென்ற பின் பெரியவர் கண்ணை மூடவே சிறியவர் கடையைக் கட்டினார். கடையைக் கட்டியதோடு, தாம் இருந்த வெங்காய வீட்டையும் வெங்காயத் தெருவையும் வெங்காய ஊரையும் விட்டே வெளியேறி, வேறொரு புது ஊரில் குடியேறி, புது வீடு கட்டி, புது வாழ்வு வாழலானார். பெண்ணைப் பெற்ற புண்ணியவான்கள் சும்மா இருப்பார்களா? நீ முந்தி நான் முந்தி என்று அவருக்குப் பெண் கொடுக்க வந்தார்கள். அவர்களிடம், "உங்கள் பெண் எனக்கு வாழ்க்கைப் படுவதற்கு முன்னால், வெங்காயத்தைக் கனவிலும் நினைப்பதில்லை என்று சத்தியம் செய்து தரவேண்டும்" என்று நிபந்தனை போட்டார். பல நாளாய் இதற்கு எவரும் சம்மதிக்கவில்லை. கடைசியில் பெருங்காய வியாபாரி ஒருவர் மாத்திரம் சம்மதித்தார். அவருடைய மகளும் சத்தியம் செய்து கொடுத்தாள். வெங்காய வியாபாரியின் மகனுக்கும் பெருங்காய வியாபாரியின் மகளுக்கும் திருமணம் இனிது நிறைவேறியது. அந்தத் தம்பதிகளின் புத்திரர் தான் வெட்டிப் புலவர்.

வெங்காய வாசனையை அறியாமலே வெட்டிப் புலவரின் குழந்தைப் பருவம் கழிந்தது. அப்புறம் பள்ளிப் பருவம் வந்தது. பள்ளிக்கூடம் சேர்ந்த தினமே தகப்பனார் மகனைப் பார்த்து, "அப்பா, அருமை மகனே! மற்ற பிள்ளைகளைப் பார்த்து நீயும் வெங்காயப் பண்டங்களை வாங்கித் தின்னாதே!" என்று சொன்னார். அதைத் தின்று தான் பார்ப்போமே என்று வெட்டிப் புலவ



ருக்குத் தோன்றிற்று. துணிந்து ஒரு வெங்காய வடை வாங்கிச் சாப்பிட்டார். அதன் வாசனையும் ருசியும் அவரை அப்படியே அடிமை கொண்டு விட்டன. அப்புறம் அவ்வளவுதான்; தினம் தினம் திருட்டுத்தனமாக வெங்காயப் பட்சணங்கள் வாங்கித் தின்ன ஆரம்பித்தார். வெங்காய ருசியோடு, திருட்டுத்தனமாகத் தின்னும் ருசி வேறு சேர்ந்து கொண்டது. வேறு எதை மறைத்தாலும் மறைக்கலாம், வெங்காய வாசனையை மறைக்க முடியாதல்லவா?

தகப்பனாருக்கு எப்படியோ விஷயம் தெரிந்து போயிற்று. மீண்டும் புத்திமதி கூறினார். அதட்டினார், வைதார், அடித்தார், உதைத்தார். அடக்குமுறை அதிகமாக ஆக, வெட்டிப் புலவரின் ஆசை அதிகரித்ததே தவிர குறையவில்லை. கடைசியில் என்ன? தகப்பனார் விட்டுக் கொடுத்தார்; பிள்ளை விட்டேத்தியாக, சுயேச்சையாக வெங்காயத்தைத் தன் வாழ்க்கையின் பிரதான அம்சமாகச் சேர்த்துக் கொண்டார். வெட்டிப் புலவரின் கண்களுக்கு உலகமே வெங்காய உலகமாகத் தோற்றமளித்தது.

உலகத்தில் ரோஜா எப்படி உண்டாயிற்று, குயில் எப்படி உண்டாயிற்று, குதிரை எப்படி உண்டாயிற்று என்பதற்கெல்லாம் கதைகள் சொல்கிறார்கள் அல்லவா? அதேபோல, வெங்காயம் எப்படி உண்டாயிற்று என்பதற்கும் ஒரு கதை இருக்கிறது. அதைச் சுருக்கமாகச் சொல்கிறேன், கேளுங்கள் :—

வெங்கிமலை வெங்கிமலை என்ற ஊரிலே, வெங்கோபாச்சார் வெங்கோபாச்சார் என்ற திருநாமம் பூண்ட ஹநுமத் பக்தர் ஒருவர் வசித்து வந்தார். அவர் போஜனப் பிரியர். அறுசுவை உண்டி தயாரிப்பதற்கென்று தனித்தனி நிபுணர்களான ஆறு பரிசாரகர்களை அவர் வேலைக்கு வைத்திருந்தார். பல வருஷ காலம் பரமானந்தமாய் உண்டு களித்துக் கொண்டிருக்கையில், ஒரு சமயம் திடீரென்று அவரை அன்னத்வேஷம் பிடித்துக் கொண்டது. சாப்பாடு என்ற பேச்சைக்

கேட்பதே அருவருப்பாகும்படி அவ்வளவு தூரம் நோய் முற்றி விட்டது. பாக சாஸ்திரிகள் பதார்த்த குண சிந்தாமணியை ஆராய்ந்து, எத்தனையோ விதமான பதார்த்தங்களை எத்தனையோ விதமாகப் பக்குவம் செய்து பரிமாறினார்கள். ஆயுர்வேத வைத்தியர்கள் எத்தனையோ கிருதங்கள், அரிஷ்டங்கள், லேகியங்கள், சூர்ணங்கள் முதலியவற்றைக் கொடுத்தார்கள். ராயரின் அத்தைப் பாட்டி வந்து, சாதத்தை 'ஓதி'க் கொடுத்தாள்; திருஷ்டி கழித்தாள். மந்திரவாதிகள் வந்து ஜடாக்ஷரி ஜபம் ஜபித்து ரக்ஷை கட்டினார்கள். ஒன்றும் பலிக்கவில்லை.

பார்த்தார் ராயர். இனிமேல் கடவுள் கிருபை கிடைத்தால்தான் பசியாப்பிணி தீருமென்று கண்டு தம் இஷ்ட தெய்வமான ஹநுமாரை நோக்கி, கல்லும் கசிந்துருகும்படிப் பிரார்த்தித்தார்.

பிரார்த்தனை வீண் போகவில்லை. அன்றிரவே ஆஞ்சநேயர் கனவில் தோன்றி, காலையில் தோட்டத்தை எட்டிப் பார்க்கும்படி ஆக்ஞாபித்தார். அப்படியே பார்த்தபோது தோட்டம் நிறைய ஒரு புதுவிதப் பயிர் மண்டிக் கிடப்பதைக் கண்டார். அந்தப் பயிரிலிருந்து வீசிய வாசனையே ராயரின் நாக்கில் ஜலம் ஊறும்படி செய்தது. ராயரிடமோ நளபாக நிபுணர்கள் இருந்தார்களல்லவா? அவர்கள் அந்தப் புதிய பதார்த்தத்தை வெகு நேர்த்தியாகச் சமைத்துப் பரிமாறினார்கள். ராயர் கலத்தருகே உட்கார்ந்ததுமே, ஒரே மண்டாக மண்ட ஆரம்பித்தார். அத்தனை நாள் சாப்பிடாமற் போனதற்கெல்லாம் வட்டி சேர்த்துச் சாப்பிட்டார்.

மறு நாளே தமது வயல்களிலெல்லாம் அந்தப் புதிய அருமருந்தைச் சாகுபடி செய்யும்படி கட்டளையிட்டார். அதோடு தாம் அடைந்த இன்பத்தைப் பிறரும் அடைய வேண்டும் என்ற பரோபகாரச் சிந்தையுடன் அப் புதிய தாவரத்தை நாலு திசையிலும் பிரபலப் படுத்தினார். அந்தத் தாவரத்தை ராயருடைய பெயரை யொட்டி, "வெங்கிமேல ராயர் பூண்டு" என்றே ஜனங்கள் முதலில் குறிப்பிட்டார்கள். பிறகு அது "வெங்கிராயர்" என்பதாகக் குறைந்து, அப்புறம் முறையே, "வெங்கி ராயம்" "வெங்காரயம்" என்றெல்லாம் சிதைந்து, கடைசியில் "வெங்காயம்" என்பதாக நிலைத்தது!

# காலக்ஷேபம்

## துரதிர்ஷ்டம்

தபால்காரன் :—ஐயா, உம்மை எனக்குத் தெரியாது. இந்த ஐந்து ரூபாய் மணியார்டரைப் பெற்றுக் கொள்ள வேண்டுமானால் இந்த ஊரில் உமக்குத் தெரிந்தவராய் ஒருவரைச் சாட்சிக் கையெழுத்துப் போடச் சொல்லும்.

மற்றவர் :—அட துரதிர்ஷ்டமே! நான் ஊருக்குப் புதிசு. இவ்வூரில் ஒருவரைத்தான் தெரியும். அவருக்கும் நான் ஐந்து ரூபாய் கடன் கொடுக்க வேண்டியிருக்கிறதே!



## நிறுக்க வேண்டியது

ஒரு ஸ்திரீ (கடைக்காரரிடம்):—என் ஐயா, மோசமான தராசில் நிறுத்திருக்கிறாய்? இரண்டு வீசை வெண்ணெயை வாங்கிவரும்படி பையனிடம் சொல்லி யனுப்பினால் ஒரு வீசை வெண்ணெயைக் கொடுத்து அனுப்பியிருக்கிறாயே!

கடைக்காரன் :—ஒரு மோசமும் இல்லையம்மா! நம்ம நிறையிலே பிசகு கிடையாது. பையனைத்தான் நிறுத்துப் பார்க்க வேண்டும்!



## சங்கீத ஞானம்

ஒருவர் (பிடில் வாசிப்பவரைச் சுட்டிக் காட்டி) :—இப்பொழுது அவர் என்ன வாசிக்கிறார், சொல்லுங்கள் பார்க்கலாம்.

மற்றவர் :—இது தெரியாதா? பிடில் வாசிக்கிறார்!



## பேசியதன் காரணம்

மனைவி:—நீங்கள் ராத்திரி தூக்கத்தில் பேசிக் கொண்டிருந்தீர்களே?

புருஷன் :—பகல் எல்லாந்தான் நீ பேசிக் கொண்டிருக்கிறாயே!



## கொள்ளை மலிவு!

ஒருவர்:—நீர்தான் ஒரு மாதம் ஊரிலேயே தங்கப்போவதாகக் கூறினீரே, ஏன் 'ரிடர்ன்' டிக்கெட்டு வாங்கியிருக்கிறீர்?

மற்றவர்:—பாதேரா மலிவு என்று சொன்னார்களே!



## நல்ல சமையல்!

கணவன் :—என்ன இது! தோசை இப்படித் தீய்ந்து போயிருக்கிறதே!

மனைவி :—அடடா! நான் கவனிக்கவே இல்லையே! ரேடியோவிலே யாரோ 'நல்ல சமையல் பண்ணுவது எப்படி?' என்பது பற்றிப் பேசினார். அதைக் கேட்டுக் கொண்டே யிருந்து விட்டேன்.




Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras.

# தி இந்தியன் பாங்க் லிமிடெட்

★

தலைமை ஆபீஸ் :
"இந்தியன் பாங்க் பில்டிங்ஸ்"
வடக்கு பீச் ரோடு, மதராஸ்

★

லோகல் ஆபீஸ்கள் :
எஸ்பிளனேட், திருவல்லிக்கேணி, மவுண்டு ரோடு, மயிலாப்பூர், தியாகராயநகர், புரசவாக்கம், எழும்பூர்

சென்னை மாகாணத்தில் எல்லா முக்கியமான இடங்களிலும் பம்பாயிலும் பிராஞ்சுகளும் சப் ஆபீஸ்களும் உள்ளன.

★

வழங்கி வாக்களிக்கப்பட்ட
மூலதனம் ரூ. 71,10,900

செலுத்தப்பட்ட
மூலதனம் ரூ. 51,67,608

ரிசர்வ் நிதி ரூ. 61,50,000

★

சகலவிதமான பாங்க் அலுவல்களும் நடத்தப்படும். மற்ற விவரங்களுக்குப் பாங்கியின் எந்த ஆபீஸுக்காவது எழுதி தெரிந்து கொள்ளலாம்.

N. கோபால அய்யர்
செக்ரடரி




## பிஸ்மாக்

**உட்கொள்ளுங்கள் !**

உற்சாகக் குறைவாகவும் வாழ்க்கையிலேயே வெறுப்பும் கொண்டவராகவும் இருந்தால் பிஸ்மாக் (பைஸுரேடட் மக்னீஷியா) உட்கொள்ளுங்கள். அது வயிற்றில் ஏற்படும் எல்லா சங்கடங்களையும், அஜீரணத்தையும், சோம்பலையும், இன்னும் எல்லா வயிற்றுக் கோளாறுகளையும் நீக்க வல்லது.

உபயோகமற்ற போலிகளை வாங்காதீர்கள்! பிஸ்மாக் உட்கொண்டு நல்ல ஜீரண சக்தி அடையுங்கள்.




மாத்திரைகளாகவும் பௌடராகவும் எல்லா மருந்துக் கடைகளிலும் கிடைக்கும்.

Sole Distributors in India:
Geoffrey Manners & Co., Limited
BOMBAY, CALCUTTA, MADRAS and LAHORE

இந்தியாவுக்கு பூரண விநியோகஸ்தர்கள் :
ஜியோப்ரே மானர்ஸ் & கம்பெனி லிமிடெட்
பம்பாய், கல்கத்தா, சென்னை, லாகூர்

# தற்காலத்திய மகத்தான தெலுங்கு படம்!

ஆந்திர தேசத்தில் மிகவும்
வெற்றிகரமாக ஓடிக்கொண்டிருக்கிறது

**சோபனாசலாவின்**



# 'கொல்லபாமா'

( தெலுங்கு )

**கிருஷ்ணவேணி, அஞ்சலி தேவி**
முதலியோர் நடித்தது

டைரக்ஷன் : ஸி. புல்லையா

ஸிலோன் உள்பட தமிழ்நாடுகளுக்கு உரிமையாளர்கள் :
**சாமிரையா டாக்கி டிஸ்ட்ரிப்யூட்டர்ஸ், மதராஸ்**

சென்னை நகருக்கும், தென், வட ஆற்காடு, செங்கல்பட்டு
ஜில்லாக்களுக்கு :
**பயனீர் பிக்சர்ஸ், குடியாத்தம்**

REGD. No. M. 4392








சென்னை
24-3-47

"கல்கி" ஆசிரியர் அவர்களுக்கு,



அன்பார்ந்த ஐயா,

தங்களுடைய 16-3-47 "கல்கி" இதழில் எட்டயபுரம் பாரதி ஞாபகார்த்த மண்டப காரியத்தைப் பற்றி எழுதியிருந்த கட்டுரையைப் படித்து ஆனந்தித்தேன். பாரதியார் மகா கவி. தேச விடுதலையைப் பற்றிப் பல பாடல்களைப் பாடியதோடு ஜாதி[?] விடுதலையைப் பற்றியும் உணர்ச்சி மிக்க பாடல்களைப் பாடியிருக்கிறார். அவர் பாண்டியில் இருந்த நாளில் ஆதி திராவிடர்களுக்கு தீக்ஷை கொடுத்தார். இது அன்றி அவர்கள் வசித்த இடத்திலும் தானும் கூட இருந்து[?] அவர்களுடன் வசித்து வந்தார். அவர்கள் முன்னேற்றத்துக்காக பல சேவைகள் செய்தார். அவர் மறைந்த பின்னர் அவருக்கு ஞாபகார்த்த மண்டபம் கட்டும் முயற்சியைப் பெரிதும் பாராட்டுகின்றேன். அந்தத் திருப்பணிக்காக ரூ. 50[?] இத்துடன் அனுப்பியிருக்கிறேன். மண்டபம் பூர்த்தியாகித் திறப்பு விழா நடக்கும் நாளை எதிர்பார்க்கிறேன்.



[illegible]

ஜெ. சிவஷண்முகம் பிள்ளை[?]



எட்டயபுரம்
15—3—47

அன்புமிக்க ஆசிரியர் கல்கி அவர்களுக்கு,

பாரதியின் பாட்டு அமர வாழ்வு பெறக் கூடியவை. அத்தகைய மகா கவிக்கு ஞாபகார்த்த மண்டபம் கட்ட முயற்சி தொடங்கினால், அந்த நிதியைக் குறைந்தது லக்ஷமாக்காமல் எப்படி நிறுத்தலாம்? இது தமிழர்கள் கேட்கக் கூடிய கேள்விதானே?

மற்ற நிதி வசூல் முயற்சிகளுக்கு இடம் தர வேணுமென்ற காரணத்தினால் முன்னம் நடுவில் பலவந்தமாக பாரதி ஞாபகார்த்த நிதியை நிறுத்தி விட்டீர்கள்.

தமிழ்ப் பெரியவர்களின் ஆக்ஞையை நன்றாக நிறைவேற்ற வேண்டும். ஓங்கி வளர்ந்த மாளிகைக்குக் கூடகோபுரங்கள் கட்ட வேண்டும். சுற்றிலும் அழகான தோட்டம் உண்டாக்க வேண்டும். நெடு உயர்ந்த தூண்களில் ஆலாது மணிகள் தொங்கவிட வேண்டும்.

இவைகளெல்லாம் செய்யப் பணம் நிறைய வேண்டாமா? தயவு செய்து மீண்டும் என்னுடைய காணிக்கையை ஏற்றுக் கொள்ளுங்கள். தங்கள் முயற்சி மறுபடியும் தொடங்கட்டும்.

தமிழர்களின் தாராள குணத்தில் இன்னமும் தயக்கம் காட்டுவானேன்?

பதினாயிரத்தோடு நிறுத்தி விடக் கூடாது. போதும் போகிறது என்று ஒரு லக்ஷத்தோடு நிறுத்திக் கொள்ளுங்கள்.

இத்துடன் காணிக்கை ரூபாய் நூற்று ஒன்று வருகிறது.

அன்பன்,
வி. என். வெங்கடாச்சாரி.

[கனம் ஸ்ரீ சிவஷண்முகம் பிள்ளை அவர்களின் நன்கொடை ஐம்பதையும், அமர கவி பாரதியார் ஐம்பதினாயிரம் என்று பாராட்டுவார் என்பதில் சந்தேகமில்லை. சென்னைச் சட்டசபைத் தலைவருக்கு நமது மனமார்ந்த நன்றியைச் செலுத்துகிறோம். அன்பர் ஸ்ரீ வி. என். வெங்கடாச்சாரியாரைப் போல் உற்சாகமுள்ள இன்னும் ஆயிரம் தமிழர்கள் முன் வந்தால், அவருடைய மனோரதம் எளிதில் கைகூடி விடும்.—ஆசிரியர், "கல்கி."]

